ஆண்மை—
திடவடிவம்,
தீரம், திறமை,
கம்பீரம்.
ஆண்மையின்
பன்முகப்
பண்புகளைப்
படித்தறிந்த
படைப்பு
'எஸ்டர்காட்'

MAFATLAL GROUP

எஸ்டர்காட்®

ஆண்மகன் இதோ ஆளவருகிறான்.
எங்கும் அவன் செங்கோல்.
'எஸ்டர்காட்' அவன் உடுப்பு.

'எஸ்டர்காட்' பாலியெஸ்டர் இழை
கலந்த காட்டன் சூட்டிங்குகள்

தவிர, இளம் சாயல்களிலும்,
எடுப்பான வண்ணங்களிலும்,
பெருமிதப் பிரிண்டுகளிலும்
'மெ:ப்ரின்' 100% பாலியெஸ்டர்
சேலைகள், பாலியெஸ்டர் இழை
கலந்த காட்டன் சேலைகள்,
'மெ:ப்ரின்' பாலியெஸ்டர் இழை
கலந்த உடுப்புத் துணிகள்—

இலேசான லான்கள், கோடை
நிழல் படரும் கேம்ப்ரிக்குகள்,
கோலாகல நகை விரியும்
பாப்லின்கள்; அதி நவீனமான
அரும்பெரும் அழகு வண்ணங்
களிலும், பிரிண்டுகளிலும்
'டெரோலெஸ்' பாலியெஸ்டர்
இழைகலந்த காட்டன்
ஷர்ட்டிங்குகள்.

**மபத்லால்
க்ரூப்**



ரெடிமேட் ஷர்ட்டுகள்
வாங்கும்போது
தரமான மபத்லால்
உடைகளுக்கான
'ஸ்மார்ட்டி'
சின்னம்
இருக்கிறதா
பாருங்கள்!

AIYARS-H. 173 TM

மனதிற்குகந்த
தூய வெண்மையைப் பெற

# ஓ ஓ பி ®
# நீலம்

ஓ ஓ பி நீலம் உடனடியாக முற்றிலும் கரைந்துவிடும் வெள்ளைத் துணிகள் ஒரே சீராக பால்போல் பளிச்சிடுகின்றன. உங்கள் சட்டைகள், புடவைகள், பெட்ஷீட்டுகள் மற்ற துணிகள் எதையும் வெள்ளை வெளேர் என்று ஆக்க மிகவும் சிக்கனமான வழி இது. நீலப்புள்ளி விழாது, மஞ்சள் திட்டு தெரியாது.

ஓ ஓ பி நீலம் மேற்கு ஜெர்மன் கூட்டுறவுத் தயாரிப்பு இந்தியாவின் மிக நவீன அல்டிராமரைன் தொழிற்சாலையில் உருவானது

தயாரிப்பாளர்:
அல்டிராமரைன் & பிக்மென்ட்ஸ் லிமிடெட், அம்பத்தூர், சென்னை 53





# சிந்தால் வாக்குறுதி...

மேனியெழிலுக்கு முழுப் பராமரிப்பு

புதுமை குன்றாத நறுமணம்

துர்நாற்றத்திலிருந்து சிறந்த பாதுகாப்பு

## ...சிந்தால் மட்டுமே நிறைவேற்றக்கூடியது




அற்புத பாக்டீரியாநாசினி ஜி- 11 ( ஹெக்ஸாக்ளோரோஃபீன் ) அடங்கிய ஒரே சோப் சிந்தால். உடலில் துர்நாற்றத்திற்கும் சருமத்தில் களங்கங்களுக்கும் காரணமாக விளங்கும் பாக்டீரியாக்களை ஜி–11 அழித்து விடுகிறது. சிந்தால் உங்கள் மேனியெழிலை அப்பழுக்கின்றி வைத்திருப்பதுடன், உங்களை நாள் முழுவதும் புத்துணர்ச்சியுடன் வைத்திருக்கிறது.

Interpub/GSC/5 Tam

# சுட்ட புண்கள்! வெட்டுக் காயங்கள்!
# விரைவில் இட்டுப் பாருங்கள் பர்னல்

## குளுமையுடன் இதமளிக்கும் நிவாரணி



பர்னல் பட்டவுடனே சட்டென ஆற்றும்.



ஆற்றும் போதே இதம்.



'பட்டு' தண்டனே இன்றியே சட்டென காயமாற்றும்.

வீடு என்றும் விபத்துக்கள் நேரத்தான் செய்யும். குழந்தைக்கு அடிக்கடி அடிபடுவது சகஜம். சமையலறையிலோ எந்த நேரத்திலும் கொதி எண்ணெய் தெறிக்கலாம்; காய்கறி நறுக்கும்போது விரலிலே பட்டு விடலாம். எனவே எப்போதும் கைவசம் இருக்கட்டும் பர்னல்! குளுமையுடன் இதமளிக்கும் பர்னல். தீப்புண், வெட்டு, சிராய்ப்பு, கட்டி மற்றும் காயங்களை ஆற்றும் பலபயன் நிவாரணி. இட்டவுடன் இதமளித்து ஆற்றுவது பர்னல்.

**பர்னல் 40 ஆண்டுகளுக்கும் மேலாக கணக்கற்ற இல்லங்களில் காயமாற்றிவரும் நம்பகமான நிவாரணி**






பூட்ஸ் ப்யூர் டிரக் கம்பெனி (இந்தியா) லிமிடெட்

ASP/8/8-15 TH



கோவை யுனைடெட் பைனான்ஸ் பார்ட்னர் திரு K. V. சீனிவாசன், B.A. அவர்களின் புதல்வி செல்வி கல்பனா என்ற நாமகிரி, B. Sc.,க்கும் மைசூர் மாவட்ட கல்வி அதிகாரி திரு என். ராமராவ், B. Sc., B. T. அவர்களின் குமாரர் செல்வன் N. R. வாசுதேவன் M.A.,phD. க்கும் கோபி சீதாலட்சுமி திருமண மண்டபத்தில் வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தது. திருமண வைபவத்திற்கும் அதன் பின் கோவை ஆர். எஸ். புரத்தில் மணமகள் இல்லத்தில் நடந்த வரவேற்பு வைபவத்திற்கும் ஏராளமான நண்பர்களும், உறவினர்களும், வியாபாரப் பெருமக்களும் வந்திருந்து மணமக்களை வாழ்த்தி பரிசளித்துச் சென்றனர்.


ZED
REGD TD MK

# உங்கள் குடும்பத்தின் ஆரோக்கியத்திற்கு வைடமின்களும், தாதுப் பொருள்களும் இன்றியமையாதவை.

*அவை போதுமான அளவில் கிடைக்கின்றனவா?*

வைடமின்கள் மற்றும் தாதுப் பொருள்களின் பற்றாக்குறை உங்கள் குடும்பத்தின் ஆரோக்கியத்தைப் பாதிக்கக்கூடும். சோர்வு, ஜலதோஷம், பசியின்மை, உடல் இளைத்துப்போதல், சரும உபாதைகள், மற்றும் பல உபாதைகள் - இவற்றிற்கு மூலகாரணம் சாதாரணமாக, இன்றியமையாத வைடமின்கள் மற்றும் தாதுப் பொருள்களின் பற்றாக்குறைதான். இருப்பினும், வைடமின்களும், தாதுப் பொருள்களும் பெரும்பாலும் அலட்சியம் செய்யப்படுகின்றன. மிகவும் கவனமாகத் திட்டமிடப்பட்ட உணவில் கூட இவற்றின் பற்றாக்குறை காணப்படுகிறது. வளமான உணவு எல்லாம் சரிவிகித உணவாக இருப்பதில்லை; விதவிதமான உணவுகளிலும், வைடமின்கள் மற்றும் தாதுப் பொருள்களின் பற்றாக்குறை இருக்கக் கூடும். அப்படியானால், அத்தியாவசியமான வைடமின்களும், தாதுப் பொருள்களும் - அதுவும் சரியான விகிதங்களில் - உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கின்றன என்று நிச்சயமாக எப்படிச் சொல்ல முடியும்? உங்கள் குடும்பத்தில் ஒவ்வொருவருக்கும், தேவையான அளவுகளில் இந்த இன்றியமையாத போஷாக்குச் சத்துக்கள் கிடைப்பதை உறுதிப் படுத்திக் கொள்ள, அவர்களுக்கு விம்க்ரான் - ஸ்க்விப் பல்வேறு வைட்டமின், தாதுச் சத்து மாத்திரைகள் - கொடுங்கள், தினம் ஒரு மாத்திரை வீதம். இந்த ஆரோக்கியமான வழக்கத்தை இன்றே ஏன் ஆரம்பிக்கக்கூடாது?

விம்க்ரானில் 11 முக்கியமான வைடமின்களும், 8 தாதுப் பொருள்களும் சரியான அளவுகளில் அடங்கியிருக்கின்றன. இரத்தச் சிவப்பு உயிரணுக்களை வளர்க்கவும், சக்தியை மீண்டும் பெற உதவவும் இரும்புச் சத்து - எலும்புகளையும் பற்களையும் உறுதியாக வைத்திருக்க கால்ஷியம் - ஜலதோஷத்தை எதிர்க்கும் சக்தியை அதிகரிக்க வைடமின் ஸி - சிறந்த கண் பார்வைக்கும், ஆரோக்கியமான சருமத்திற்கும் வைடமின் ஏ - பசியைத் தூண்டி, தாங்கும் சக்தியை அதிகரிக்கும் வைடமின் பி-12 - இவற்றுடன், உங்கள் குடும்பத்தின் ஆரோக்கியத்திற்குத் தேவையான இதர போஷாக்குச் சத்துக்களும் அடங்கியிருக்கின்றன.

# விம்க்ரான்®

பல்வேறு வைட்டமின்-தாதுச் சத்து மாத்திரைகள்

**11 வைட்டமின்களும் 8 தாதுப் பொருள்களும் அடங்கியது.**

**ஒரே ஒரு விம்க்ரான் மாத்திரை உங்களை நாள் முழுதும் சக்தியுடன் வைத்திருக்கப் போதுமானது.**

Squibb SARABHAI CHEMICALS

Shilpi HPMA-23A/71 Tam

# புதிய தாய்மார்களுக்கு !

## குழந்தைக்கு பாரெக்ஸ் கொடுக்க ஆரம்பிக்க வசதியாக ஒரு விசேஷ 100கிம். டப்பா.




3 மாதம் முதல் குழந்தைக்கு திட உணவு தேவை. குழந்தையின் மென்மையான ஜீரணத்திற்கேற்ற சரியான புரதச் சத்தோடு, அதன் முழுமையான வளர்ச்சிக்கு வேண்டிய கார்போஹைட்ரேட்டுகள், கால்ஷியம், வைட்டமின்கள் மற்றும் இரும்புச் சத்துக்கள் யாவும் நிறைந்தது பாரெக்ஸ். இப் புதிய 100 கிம். டப்பாவை வாங்குங்கள்—குழந்தைக்கு பாரெக்ஸ் கொடுக்க ஆரம்பிக்கும் போது அது மிகவும் வசதியாக இருக்கும்

**பாரெக்ஸ்®**—க்ளாக்ஸோ தயாரிப்பு

சீரான உடல் வளர்ச்சிக்குக் குழந்தையின் முதலாவது திடஉணவு.

# கல்கி

## பொருளடக்கம்

விரோதிகிருது புரட்டாசி 24 - அக்டோபர் 10, 1971







"காஷ்மீரிலேருந்து இன்னிக்குத் தான் திரும்பி வந்தேன்" என்கிறுள் கண்மணி காயத்ரி.

அட்டைப்படம்: வித்யாஷ்ரதா


பத்திரிகை
தொழிலாளர் சங்கம்
ஜீவாதார உரிமை
ராஜ்ய அரசாங்கம்
சுப்ரீம் கோர்ட்
கடல் சிலந்தி
OOMMEN





# காந்தீயம் இல்லாத காந்தி ஜயந்தி!

அக்டோபர் இரண்டாந் தேதி காந்தி ஜயந்தியன்று இதை எழுதுகிறேன். எளிய மக்களுக்குக் காந்திஜியிடம் உள்ள பக்தியைச் சுயநலனுக்காகப் பயன்படுத்திக் கொள்கிற ஏமாற்று வேலைதான் இன்று எங்கும் காணப்படுகிறது. இந்த வெள்ளத்தோடேயே நானும் மிதந்துவிட்டுப் போகாமல் கசப்பான வார்த்தைகளை எழுத நேர்ந்ததற்கு வருந்துகிறேன்.

பிர்லா மாளிகை, காந்தி சதன் ஆகப் போகிறது. உண்மையில் இந்தியா முழுவதுமே காந்தி சதன்தான். ஆனால் பரிதாபம் என்னவெனில், காந்தி எதற்கெல்லாம் வாழ்ந்தாரோ அவற்றையெல்லாம் இந்தியாவை ஆள்வோர் கைவிட்டு விட்டார்கள். இந்தியாவை இன்று ஆள்வோரின் கொள்கைகள் எவ்வளவு தவறானவை என்பதை எடுத்துக்காட்டுகிற ஒரு சின்னமாகத்தான் காந்தி சதன் விளங்கும்.

கோட்ஸே காந்திஜியை 1948-ம் ஆண்டு ஜனவரி முப்பதாந் தேதி கொன்றான். நீதி விசாரணை நடந்து அவன் தண்டிக்கப்பட்டான். ஆனால் இன்று நாட்டில் ஆட்சி அதிகாரம் பெற்று உண்மைக்குப் பதில் பொய் பேசும் ஒவ்வொருவரும் நீதி விசாரணைக்கு உட்பட்டுத் தண்டனை பெறாது போனாலும் கூட கோட்ஸேயின் கூட்டாளியே. இந்தியா என்கிற காந்தி சதன், காந்தி தமது வாழ்நாள் முழுவதும் எந்த சுதந்திரத்துக்காகப் பாடுபட்டாரோ அதிலிருந்து விலகிச் சென்று ஏகாதிபத்தியத்துக்கு உட்படுமாறு தவறான பாதையில் அழைத்துச் செல்லும் ஒவ்வொருவரும் கோட்ஸேக்கு உடந்தைதான்.

சத்தியத்தை விலக்கிவிட்ட ஒவ்வொருவனும், அவன் சர்க்கார் ஊழியனாயினும் சரி, வியாபாரியாயினும் சரி, கோட்ஸேயுடன் சேர்ந்து காந்தியைக் கொலை செய்தவனாவான். அதிகாரத்தைச் சுயநலனுக்காகவோ அல்லது கட்சி நலனுக்காகவோ பயன்படுத்தும் ஒவ்வொருவனும் ஒரு கோட்ஸே ஆவான். லஞ்சம் கொடுப்பவன் அல்லது வாங்குபவன் ஒவ்வொருவனும் தண்டனைக்குள்ளாகாத கோட்ஸே ஆவான். பொது வாழ்வில் ஈடுபட்டு விட்டு ஏமாற்று வேலைகளில் இறங்கும் ஒவ்வொருவனும் காந்தியின் விலாவில் குத்தீட்டியைச் செருகினவன் ஆவான்.

வாசாலகமான ஏமாற்றுப் பேச்சுகளைக் கேட்டுத் திருப்தி அடைந்தால் நம்மை நாமே ஏமாற்றிக் கொண்டவர்கள் ஆவோம். காந்திஜி மிக உயர்ந்த மனிதர். அவரை ஓர் அற்புதம் என்று சொல்வதே பொருந்தும். ஆனால் ஆள்கிற சக்திகளும் கட்சிகளும் காந்தீயத்தை ஒதுக்கிவிட்டுச் செயலாற்றுவதையே விரும்புகின்றன. டில்லியில் அக்டோபர் இரண்டாந் தேதி காந்தி சதன் சடங்கு மிக நன்றாக நடந்தேறும். டப்பா காலியாக இருந்தால்தான் அதிகமாகச் சத்தம் எழும் என்ற பழமொழிக்கேற்ப விழா அமர்க்களப்படும். ஆனால் இவையெல்லாம், சத்தியம், சுதந்திரம் ஆகியவற்றுக்கு எதிராக நிற்கும் சக்திகளுடன் போராட நமக்குப் பயன்படா. எளிய வாழ்வையும் அதன் விளைவாகப் பெரு மகிழ்ச்சியையும் அடைய நமக்கு இவ்விழாக்கள் உதவா. நாம் தவறான பாதையில் திரிந்து வந்து விட்டோம். நமக்குத் தவறாக வழிகாட்டிச் சேற்றில் சிக்க வைத்து விட்டார்கள். இதிலிருந்து விடுபட்டு நாம் திரும்ப வேண்டும். பாவ மன்னிப்புக் கோரி க்ஷேத்திராடனம் போகத் தைரியமும் சக்தியும் அளிக்குமாறு ஆண்டவனைப் பிரார்த்திப்போம்.

(ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது)

# ராஜாஜியின் கருத்துக்கள்

## ருஷ்ய உறவு

ருஷியப் பத்திரிகைகளும் மக்களும் ஸ்ரீமதி இந்திரா காந்தியின் விஜயத்தை மேற்கு வல்லரசுகளுக்குப் பாதகமாகப் பயன்படுத்திக் காட்டுவது இயற்கையே. அமெரிக்கா வேறெதையும் எதிர்பார்க்க நியாயமில்லை. இந்தியாவுக்கு வெறுமே வாயளவில் அநுதாபம் காட்டுவதும், இனிமையாகப் பேசுவதும், பிச்சை போடுவதுமே அமெரிக்காவின் கொள்கையாகியிருக்கிறது. அதே சமயத்தில் அது பாகிஸ்தானுக்கோ ஆயுத உதவி அளித்து, அந்த நாடு இந்தியாவிடம் விரோதம் பாராட்டுவதை ஊக்கி வருகிறது. மேற்கத்திய வல்லரசுகள் பாகிஸ்தானை ஒரு நேச நாடாக மதிக்கின்றன; இந்தியாவை வெறும் பிச்சைக்கார நாடாகவே கருதி, பிச்சை போட்டு அநுதாப வார்த்தை சொல்வதோடு நிறுத்திக் கொள்கின்றன. ஸ்ரீமதி இந்திரா காந்தியும், ஸ்ரீ கோஸிஜினும் புதிய இந்திய-ருஷிய உறவில் மகிழ்ச்சி கொண்டிருப்பதில் வியப்பேதும் இல்லை. ஆடையில் வெறும் கவர்ச்சிக்காக வைத்துத் தைக்கப்படும் அதிகப்படிக் கொசுவங்களைப் போல் இந்த நல்லுறவுக்கிடையிலும் 'கூட்டுச் சேராமை' என்ற கொசுவத்தைச் செருகி வருகிறார்கள்!

## அந்தஸ்து வேறு; மகிழ்ச்சி வேறு

தொழிற்சாலைகளில் பணி செய்கிற தொழிலாளிகளில் சிலரைப் பங்குதாரர்களாக்குவதால் தொழிலாளர் பிரச்னை தீர்ந்து விடாது. இதனால் தொழிலாளர்களுக்குள்ளேயே பூசல்கள் உண்டாகும். பங்குகளோ, வீடோ, நிலமோ, எதுவாயினும் 'சொந்தக்காரர்' என்ற உரிமையும், அந்த உரிமையோடு வருகிற பொறுப்புக்களும், பெற்றால்தான் மகிழ்ச்சி பெற முடியும் என்பதில்லை. இது அந்தஸ்தை வேண்டுமானால் அளிக்கக்கூடும்; சந்தோஷத்தை அல்ல. அந்தஸ்தை ஒரு பெரிய விஷயமாக எண்ண வேண்டாம். அந்தஸ்து வித்தியாசத்தைச் சமன் செய்துவிட்டால் நிச்சயமாக சுபிட்சம் வந்துவிடும் என்றும் நினைக்க வேண்டாம்.

தொழிலாளியானாலும் சரி, முதலாளியானாலும் சரி, அனைவரும் தங்கள் குற்றம் குறைகளைத் தாமே களைந்து, கட்டுப்பாட்டுடன் ஒழுங்காக நடந்தாலே வாழ்வில் மகிழ்ச்சி காண முடியும். வாழ வகை தெரியாதவர்கள் பெரிய கார் வைத்திருந்தாலும் சந்தோஷமாக இருக்க முடியாது: அந்தக் காரை ஓட்டும் டிரைவர் அவரைவிட மகிழ்ச்சியை வாழ்க்கையில் காண்பார்.

## ஆளும் கட்சியும், தொழிற்சங்கமும்

தொழிற்சங்கங்களின் மீது ஆதிக்கம் பெறுவதற்காகப் பல ராஜ்யங்களில் ஆளும் கட்சி எஜமானர்கள் அக்கறைத்துச் செய்து வருகிறார்கள். சட்டசபை ஜனநாயகத்தைத் தழுவி இந்தியாவில் ஏற்பட்டுள்ள, படுமோசமான அம்சங்களில் இதுவும் ஒன்றாகும்.

முதலில் ஆளும் கட்சி முக்கியஸ்தர்கள் கலபமாகத் தொழிற்சங்கங்களை வசப்படுத்திக் கொள்கிறார்கள். பிற்பாடு தொழிலாளர்களைத் தொந்தரவுசெய்யுமாறு தூண்டிவிட்டு, தொழில் நிர்வாகஸ்தர்களைப் பயமுறுத்தி, அவர்களது பணப் பெட்டியின்மீதும் ஆதிக்கம் பெறுகிறார்கள்.

பௌதிகமான பலாத்காரத்தைக் காட்டுவது தொழிலாளர் சங்கங்களின் அடிப்படை நோக்கத்துக்கே முரணானது. நிர்வாகிகளிடமிருந்து நியாயமான உரிமைகளைப் பெறுவதே தொழிற் சங்கங்களின் நோக்கம்; பதவி வகிக்கிற கட்சிக்கு இரகசியமாக வசதிகளை ஏற்படுத்தித் தருவதல்ல.

---

## சங்கீர்த்தன சதாபிஷேகம்

பகவந்நாம சங்கீர்த்தனத்திலேயே சதாகால அபிஷேகம் கொண்டு முழுகியிருந்த புதுக்கோட்டை பிரம்மஸ்ரீ கோபாலகிருஷ்ண பாகவதரவர்கள் சதாபிஷேகம் செய்துகொள்ளு முன்பே மறைந்து விட்டார். ஆனாலும் ஸ்ரீ கோபாலகிருஷ்ண நாமப் பிரசார சபையினர் அவர் மறைந்தும் மறையாதவர் எனக் கருதி, அவரது சதாபிஷேகம் — அதாவது எண்பதாவது பிறந்த நாள் — நிகழுகின்ற அக்டோபர் பதினைந்தாம் தேதியை ஒரு திருநாளாகக் கொண்டாடுகின்றனர். அக்டோபர் 10ந் தேதியிலிருந்து 14ந் தேதி வரையில் சென்னை, மயிலை கற்பகாம்பாள் கலியாண மண்டபத்தில் அகில இந்திய பாகவதமேளா நடத்துகின்றனர். தேசத்தின் பல பகுதிகளிலிருந்தும் பஜனைக் குழுவினரும், சங்கீர்த்தன கோஷ்டியாரும், பாகவதர்களும் வந்து இவ்விழாவில் கலந்து கொள்கிறார்கள். அகில இந்திய ஸாயி ஸமாஜத் தலைவர் ஸ்ரீ ராதாகிருஷ்ண ஸ்வாமிஜியின் தலைமையில் நடக்கும் இவ்விழாவினை பிருந்தாவனத்தைச் சேர்ந்த ஸ்ரீ புருஷோத்தம கோஸ்வாமி தொடங்கி வைக்கிறார்.



ஆஸ்திக அன்பர்கள் இந்த சங்கீர்த்தன சதாபிஷேகத்தில் நன்கு நனைந்து பாகவதோத்தமரை நினைந்து இன்புறுவராக!

# புதிய பார்லே மாரி பிஸ்கெட்டுடன்
## காப்பியின் சுவையை அனுபவிப்பீர்




க்ளுகோ, மொனுகோ
மற்றும் சுவைமிக்க இதர
பிஸ்கெட்டுகளின்
தயாரிப்பாளர்களான பார்லே
உங்களுக்கென பிரத்யேகமாக
வழங்குகின்றனர்—
காப்பியின் சுவைக்குச் சுவையூட்டும்—

**பார்லே**
**மாரி**
**பிஸ்கெட்டுகள்**

**அருமையான ருசியுள்ளவை—ஃபாயில்-ஸீல்டு பேக்குகளில்**

everest/1080g/PP tam

# Rajaji-93



Rajaji entered his 93rd birthday on December 10, 1970. His admirers all over the country — people belonging to all faiths and communities and all age groups — offered prayers on that day that this great Colossus in the public life of India should cross the span of 100 years and continue to live another two and a half decades. Gandhiji wanted to live 125 years. In the words of Shri Pyarelal, "May Rajaji live to complete Gandhiji's one hundred and twenty five years at least and be to us like a shining beacon light in the stormy waters lying ahead."

The main elements of Rajaji's contribution have been an uncanny prescience, which has often led to great personal unpopularity and isolation, a fearless independence combined with a sense of true compassion for the under-privileged, a profound concern for world peace and persistent endeavour to introduce Dharma into politics and administration. These qualities were never more necessary than today, when the country is passing through an agonising crisis, but fundamentally a crisis of spirit. Moral standards have been debased as never before. A craze for power has replaced the spirit of service. In the scramble which is taking place, the dignity and freedom of the individual, on which alone true progress can be sustained, are being steadily subjected to attack by the proliferation of vexatious controls by the State.

Although frail in body, Rajaji's mind is as incisive as it ever was; and his physical frailty has not prevented him from putting in the quantum of work of which men half his age could be proud. Week after week, from the agony of his feeling for those who are socially and economically down-trodden and for the purity and integrity of public life, he has been pouring out in SWARAJYA a stream of wisdom, warning and guidance.

Friends and admirers of Rajaji throughout the country have decided to bring out a Souvenir, containing tributes to Poojya Rajaji by important personages in India and abroad on the eve of his next birthday, December 10, 1971, and with this object in view, a Rajaji Souvenir Committee has been formed consisting of K. Santhanam, H. V. R. Iengar, G. K. Sundaram, S. Narayanaswamy and T. Sadasivam. The Souvenir will also carry pictures in profuse numbers portraying the important events in Rajaji's unique life.

The proposed Souvenir will be printed on excellent paper in Royal Quarto size, i.e., the size of the Life Magazine, and will contain over 300 pages including advertisements already received; no advertisement will be accepted hereafter. The Souvenir is priced at Rs. 12/- per copy plus Rs. 1.50 to cover postage and registration charges. As only a limited number of copies will be printed, such of those that desire to own a copy of the RAJAJI - NINETYTHREE Souvenir are requested to reserve their copies of the Souvenir before 31st October 1971.



T. Sadasivam, Convener,
Rajaji – 93 Souvenir Committee
Kalki Buildings, Chetput, Madras - 31

---

We have great pleasure in announcing that in commemoration of Poojya Rajaji completing his 93rd birthday the coming December, a special discount in the subscription rate of SWARAJYA will be allowed for 93 days. A discount of 10% will be allowed to those who enrol themselves during the period ending with 10th December 1971 as subscribers to SWARAJYA for one year and they must remit Rs. 18.50 in advance to cover a year's subscription; for those that enrol themselves as subscribers to SWARAJYA for two years a discount of 20% will be allowed and they must please remit in advance Rs. 24/- to cover two years' subscription and thus save Rs. 6/- for the two-year period.

We have also great pleasure in offering a complimentary copy of RAJAJI - NINETYTHREE Souvenir to all those who become subscribers for SWARAJYA for three years at the regular rate of Rs. 15/- a year and remit Rs. 45/- in advance on or before the 10th December 1971.

*Remittances may be made by M. O. or Bank Draft addressed to:*

**Manager: 'SWARAJYA', Kalki Buildings, Madras - 31**

---





# சத்தியம்

## ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

சகல மக்களும் அநுசரிக்க வேண்டிய சாமானிய தர்மங்களில் முதலாவது அன்பு (அஹிம்சை). அடுத்தது உண்மை (சத்தியம்).

சத்தியம் என்றால் வாக்கும் மனமும் ஒன்றாக இருப்பதுதான்; மனத்தில் ஒன்றும் வாக்கில் வேறொன்றுமாக இருந்தால் அதுவே அசத்தியம் என்று பெரியவர்கள் லட்சணம் சொல்லியிருக்கிறார்கள்:

**வாங்மனஸயோ: ஐக ரூப்யம் ஸத்யம்.**

மனத்தில் உள்ளதை வெளியிட்டுச் சொல்வதற்கென்றே பகவான் மனிதனுக்குப் பேசும் சக்தியைத் தந்திருக்கிறார். மனத்தில் ஒன்றும் வாக்கில் வேறொன்றுமாக நாம் நடந்து கொண்டோமானால் அடுத்த ஜன்மத்தில் நமக்குக் கொடுத்த பேச்சுச் சக்தியைப் பறித்துக் கொண்டு விடுவார் — அதாவது மிருக ஜன்மத்தையே நமக்குத் தருவார்.

பூரண அஹிம்சைக்கு நமது சாஸ்திரத்திலேயே சில விலக்குகள் இருக்கின்றன. தர்மத்துக்காக யுத்தம் செய்யும்போதும், யாக யக்ஞங்களிலும் அஹிம்சைக்கு விலக்குத் தரப்பட்டிருக்கிறது. சத்தியத்துக்கு இவ்விதமாக விலக்கே இருக்க முடியாது என்று நினைப்பீர்கள். ஆனால் சத்தியத்துக்கும் வேறொரு விதத்தில் விலக்கு இருக்கிறது. அதைக் கொஞ்சம் விளக்குகிறேன்:

ஊரிலே பலவிதமான அயோக்கியர்கள் இருக்கிறார்கள். அதைப் பார்த்து வாஸ்தவமாகவே ஒருவனுடைய மனசு கொதிக்கிறது. அவன் அந்தத் தப்பையெல்லாம் ஓயாமல் சொல்லிக் கொண்டிருக்கிறான். 'அவன் அந்த அயோக்கியத்தனத்தைச் செய்தான், இவன் இந்த அயோக்கியத்தனத்தைச் செய்தான்' என்று சொல்லிக் கொண்டே இருக்கிறான். இவனுக்கு வாக்கும் மனசும் ஒன்றாகத்தான் இருக்கிறது. ஆனால் இவன் இப்படிச் சொல்வதால் இவனுக்கும் பிரயோசனமில்லை, ஜனங்களுக்கும் பிரயோசனமில்லை, தப்புச் செய்கிறவர்களுக்கும் பிரயோசனமில்லை. இப்படி வியர்த்தமாக வாக்கும் மனசும் ஒன்றுபட்டிருப்பதைச் சத்தியம் என்று சொல்வதற்கில்லை.

ஒருவன் மனசில் கெட்ட எண்ணங்கள் எழுகின்றன. அதை அவன் அப்படியே வாக்கிலே வெளியிடுகிறான். அது சத்தியமாகிவிடுமா?

ஆகவே சத்தியம் என்றால் வாக்கும் மனசும் ஒன்றுபடுவதுமாட்டுமல்ல. நல்ல மனசிலே தோன்றுகிற நல்ல எண்ணங்களை வாக்கில் சொல்வதே சத்தியம்.

மக்களுக்கு நன்மை பயப்பதாகவும் பிரியமாகவும் எது இருக்கிறதோ அதுவே சத்தியம் என்பதாகச் சத்தியத்துக்கு இன்னொரு லட்சணத்தை வகுத்திருக்கிறார்கள்:

**ஸத்யம் பூதஹிதம் ப்ரியம்**

பேச்சினாலும் காரியத்தினாலும் நன்மையை உண்டாக்குவதே சத்தியம்; கெடுதல் செய்வதெல்லாம் அசத்தியமே.

ஒருவனுக்கு நல்லதைச் சொன்னால் மட்டும் போதாது. அதை அவன் ஏற்றுக் கொள்ளுமாறு அன்புடன் சொல்ல வேண்டும். நல்லதைக் கடுமையாகச் சொன்னால் அதை யாரும் ஏற்கமாட்டார்கள். இவ்வாறு நிஷ்பலனாகப் போகிற நல்ல வாக்கு சத்தியமாகாது. நல்லதாகவும் இருக்க வேண்டும்; அது யாரை உத்தேசித்துச் சொல்லப்படுகிறதோ அவனுக்கு இன்பம் தரும் விதத்தில் இதமாகவும் சொல்லப்பட வேண்டும். இதுவே சத்தியம்.

'சத்தியத்தைச் சொல். பிரியமானதைச் சொல். கேட்கப் பிரியமாயிருந்தாலும், அசத்தியத்தைச் சொல்லாதே. சத்தியத்தைப் பிரியமாகச் சொல்ல முடியவில்லை என்றால் அப்போது அப்படிப்பட்ட சத்தியத்தையும் சொல்லாதே' என்பது பெரியோர் வாக்கு.

**ஸத்யம் ப்ரூயாத் ப்ரியம் ப்ரூயாத்**
**ந ப்ரூயாத் ஸத்யம் அப்ரியம்**
**ப்ரியம் ச ந அந்ருதம் ப்ரூயாத்**

காமமும் குரோதமும் உள்ள மனசிலிருந்து இப்படிப்பட்ட பிரியமான, நன்மையான வாக்கு வராது. க்ஷேமத்தையே உண்டாக்கும் சத்திய வாக்கு வரவேண்டுமானால் அதற்கு அடிப்படையாக காம, குரோதங்களற்ற நல்ல மனம் வேண்டும்.

ஆக சத்தியத்தின் லட்சணம்: மனமும் வாக்கும் ஒன்றுபட்டிருப்பது, மனம் சுத்தமாக இருப்பது, வாக்கு சாந்தமாக இதமாக

இருப்பது, மொத்தத்தில் தனக்கும் பிறருக்கும் க்ஷேமத்தை உண்டுபண்ணுவது.

சத்தியத்திலேயே ஒருவன் நிலைத்து நின்று விட்டால் அதற்கு ஓர் அவாந்தரப் பிரயோஜனம் உண்டு—அதாவது அந்த சத்தியசந்தன் உத்தேசிக்காமலே ஒரு பிரயோஜனம் சித்திக்கும். ஒருவன் சத்தியமே பேசிப் பேசிப் பழகிவிட்டால் கடைசியில் அவன் எது சொன்னாலும் அது சத்தியமாகி விடும். இப்படிப்பட்டவன் மனமறிந்து பொய் சொல்லவே மாட்டான். ஆனால் அறியாமையாலோ தவறிப்போயோ அவன் ஒரு விஷயத்தைத் தப்பாகச் சொல்லி விட்டாலும், அந்தத் தப்பே யதார்த்தத்தில் சத்தியமாக நடந்து விடும். இதற்குத் திருஷ்டாந்தமாக ஒரு கதை சொல்கிறேன்:

திருக்கடவூரில் அபிராமி பட்டர் என்று அம்பாளின் பரம பக்தர் இருந்தார். அவர் அம்பாளையே நினைத்துப் பரவசமாகும்போது உன்மத்தரைப் போலப் பிதற்றுவார். இதைப் பற்றி சரபோஜி ராஜாவிடம் யாரோ துஷ்பிரசாரம் செய்தார்கள். 'அபிராமி பட்டர் ஒரு குடிகாரர், பக்தர் என்று வேஷம் போடுபவர்' என்று ராஜாவிடம் கோள் சொல்லி விட்டார்கள். சரபோஜிக்கு இதைப் பரிசோதித்துப் பார்க்கத் தோன்றியது. ஒரு நாள் சரபோஜி திருக்கடவூரில் அபிராமியைத் தரிசிக்க வந்த போது, அங்கே தன் வசமிழந்திருந்த பட்டரிடம், "இன்றைக்கு என்ன திதி?" என்று கேட்டான். அன்றைக்கு அமாவாசை. பட்டரோ அம்பாளின் பூரண சந்திர முகத்தையே தியானம் செய்து பரவசராக இருந்தார். எனவே, அரசனிடம் 'இன்று பௌர்ணமி' என்று சொல்லி விட்டார். அரசன் தன்னிடம் மற்றவர்கள் பட்டரைப் பற்றிச் சொன்னது உண்மை என்றே நினைத்தான். பட்டரிடம் கேலியாக, 'அப்படியா, சந்திரன் உதயமாகி விட்டானு என்று ஆகாயத்தைப் பார்ப்போம்' என்று தலையைத் தூக்கினான்.

அப்போது வாஸ்தவமாகவே ஆகாயத்தில் பூரண சந்திரன் வந்து நின்றான். அபிராமி பட்டர் சத்தியத்திலேயே ஊறி யிருந்ததால், தவறிப்போய் அவர் அசத்தியத்தைச் சொன்ன போது, அம்பாளே தன் தாடங்கத்தைக் கழற்றி ஆகாயத்தில் வீசி பூரண சந்திரனாக ஜொலிக்கச் செய்தாள்.

மகான்கள் செய்கிற ஆசீர்வாதம், அவர்கள் கொடுக்கிற சாபம் எல்லாம் அப்படியே பலித்து விடுவதற்குக் காரணம் அவர்களுடைய சத்தியத்தின் சக்திதான். அவர்கள் எது சொன்னாலும் அது நடந்து விடும். இது சத்தியமாக இருப்பதன் அவாந்தரப் பிரயோஜனம். ஆனால், தான் சொல்வதெல்லாம் நடக்க வேண்டும் என்று ஆசை கொண்டு, அதன் பொருட்டே ஒருவரும் சத்தியத்தை அநுஷ்டிக்கக் கூடாது. உத்தேசமில்லாவிட்டால்தான் இந்தச் சக்தி தானாக வருமேயொழிய, உத்தேசித்து விட்டால் அப்புறம் அது 'அவாந்தர'மே அல்ல.





"பழைமையான கரகரப்-
பான பற்பொடிகள்
உங்கள் ஈறுகளுக்கும்,
பற்களுக்கும் தீங்கு
இழைக்கக்கூடும்..!"

# கால்கேட் பற்பொடி உபயோகித்து உங்கள் பற்களை-யும், ஈறுகளையும் பாதுகாத்துக் கொள்ளுங்கள்! வாய் நாற்றத்தையும் அகற்றுங்கள்!

பழைமையான கரகரப்பான பற்பொடிகள் உங்கள் ஈறுகளைச் சேதப்படுத்தி, பல் எனாமலைச் சிதைக்கக்கூடும். கால்கேட் பற்பொடி மிகவும் மென்மையானது. அது உங்கள் ஈறுகளுக்கு இதமளிக்கும் போதே, அதில் கலந்துள்ள மெருகேற்றும் பொருள் பற்களின் மீது படிந்துள்ள கறைகளைப் போக்கி, பற்களைச் சுத்தமாக வெண்மை பளிச்சிடச் செய்கிறது. கால்கேட்டின் வளமான நுரை பல் இடுக்குகளில் ஊடுருவி வாய்நாற்றம் மற்றும் பற்சிதைவுக்குக் காரணமான கிருமிகளை அகற்றுகிறது. அதனால்தான் கால்கேட் பற்பொடி வாய் நாற்றத்தை உடனே நிறுத்தி, பற்சிதைவையும் எதிர்க்கிறது. அதன் குளுமையான இன்மணத்தையும் நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள்!

நவீன
பல் பராமரிப்பு முறைகளே **சிக்கனமாக**
இருக்கும்போது பழைமையான
பற்பொடிகளை ஏன் உபயோகிக்க வேண்டும்!

உங்கள் குடும்பத்திற்கு
எகானமி சைஸ் கால்கேட்
பற்பொடியை இன்றே வாங்குங்கள்!
ஒரு டப்பா மாதக்கணக்கில் வரும்!






...பூரணமான பல் பரா
மரிப்பிற்கு விஞ்ஞான
முறையில்
உருவாக்கப்பட்ட
கால்கேட் டூத் ப்ரஷ்
உபயோகியுங்கள்.

# மகுடபதி



அமரர் கல்கி

## இருபத்தேழாம் அத்தியாயம்

## ஓடைக்கரை

சிங்கமேட்டு ஓடைக்கரை இந்த வரலாற்றில் ஒரு முக்கியமான ஸ்தானம் வகிக்கிறது. அந்த அழகான இடத்துக்கு இன்னொரு தடவை போகாமல் கதையை முடிப்பதற்கு மனம் வரவில்லை.

மாலை மணி நாலு இருக்கும். ஓடை ஜலம் நிர்மலமா யிருந்தது. ஆங்காங்கே கரையோரத்தில் உட்கார்ந்திருந்த வெண் கொக்குகள் நீரில் பிரதிபலித்தன. ஓடைக் கரையில் இருபுறமும் வளர்ந்திருந்த கல்யாண முருங்கை மரங்களில் இளந்தளிர்களும் சிவப்புப் பூக்களும் குலுங்கிக் கொண்டிருந்தன. மந்தமாகத் தவழ்ந்து வந்த குளிர்ந்த காற்றில் அவை இலேசாக ஆடின. மரக் கிளைகளில் உட்கார்ந்திருந்த குருவிகள், ஒன்றின் மூக்கை ஒன்று கொத்திக் கலகலவென்று சப்தித்தும், அவ்வப்போது ஜிவ்வென்று பறந்து போய்த் திரும்பி வந்து உட்கார்ந்தும் விளையாடிக் கொண்டிருந்தன.

குருவிகளின் குரலுடன் போட்டியிடுவதுபோல், கலகலவென்று பெண்கள் சிரிக்கும் ஒலி கேட்டது. பங்களாவின் பக்கமிருந்து இரண்டு இளம் பெண்கள் வந்து கொண்டிருந்தார்கள். கை கோத்துக் கொண்டு நடந்த அவர்களுடைய முகத்தில் குதூகலம் தாண்டவமாடியது. அவர்கள் வேறு யாருமில்லை, செந்திருவும் பங்கஜமுந்தான்.

பங்கஜத்தின் குரல்தான் ஓங்கியிருந்தது. ''எந்த மரமடி அது? அதோ தெரிகிறதே, அதுவா? நீ எப்படிப் படுத்துக் கொண்டிருந்தாய், கண்ணை எவ்விதம் மூடிக் கொண்டிருந்தாய்; அவன் என்ன செய்தான் — என்றெல்லாம் நடந்ததுபோலவே காட்ட வேண்டும். நீ என்ன பேசினாய், அவன் என்ன பதில் சொன்னான் என்பதையெல்லாம் ஒரு வார்த்தை விடாமல் சொல்ல வேண்டும்'' என்று பங்கஜம் மூச்சு விடாமல் பேசிக் கொண்டே வந்தாள்.

செந்திரு சிரித்துக் கொண்டே ஓடி, ஒரு மரத்தடிக்கு வந்ததும், ''இந்த மரந்தானடி'' என்றாள்.

''சரி; நான்தான் அந்தக் காந்திக் குல்லாய்க்காரன் என்று வைத்துக் கொள். நீ என்ன செய்தாய்? அந்த மாதிரியே செய்து காட்டு!'' என்றாள் பங்கஜம்.

செந்திரு தரையில் படுத்துக்கொண்டு கண்களையும் மூடிக் கொண்டாள்.

அப்போது பங்கஜம், நாடகமேடைக் கதாநாயகனுடைய தோரணையில் செந்திருவின் பக்கத்தில் மண்டியிட்டு உட்கார்ந்து, ''என் கண்ணே! கண்மணியே! தாமரை இதழையும், கருவண்டையும், மீனையும், வேலையும் ஒத்த உன் அழகான கண்களைத் திறந்து என்னைப் பாரோயோ?'' என்று சொல்லிக் கொண்டு சட்டென்று குனிந்து செந்திருவின் கன்னத்தில் முத்தமிட்டாள். குபீரென்று சிரித்துக் கொண்டு செந்திரு எழுந்து உட்கார்ந்தாள்.

பங்கஜம் அவளுடைய கழுத்தைக் கட்டிக் கொண்டு, ''அடியே! நிஜமாகச் சொல்! இப்படித்தானே அவன் உண்மையில் செய்தான்? நீ என்னிடம் சொன்னதெல்லாம் பொய்தானே?'' என்றாள்.

பதினாறு, பதினேழு வயதுப் பெண்கள் இரண்டு பேர் சேர்ந்தால், அவர்களுடைய பேச்சு, கொஞ்சம் அசட்டுப் பிசட்டு என்றும், தத்துப்பித்து என்றும்

இருப்பதில் வியப்பில்லையல்லவா? எனவே, இவர்களும் அம்மாதிரி பேசுவதற்குப் பதினைந்து நிமிஷம் கொடுத்து விடுவோம். ஓடைக் கரையை ஒரு சுற்றுச் சுற்றிவிட்டு வருவோம்.

* * *

பதினைந்து நிமிஷம் கழித்து நாம் திரும்பி வந்து பார்க்கும் போது காட்சி ஒருவாறு மாறியிருப்பதைக் காண்கிறோம். அதே இரண்டு பெண்கள் அதே மரத்தடியில்தான் இருக்கிறார்கள். ஆனால் இருவர் முகத்திலும் குதூகலத்துக்குப் பதிலாகச் சோகக் குறி காணப்படுகிறது.

செந்திருவின் கண்களில் ஜலம் ததும்பிக் கொண்டிருக்கிறது. "மறுபடியும் இந்த ஓடைக்கரையில் இவ்வளவு சந்தோஷமாக ஒருநாள் உட்கார்ந்திருப்போம் என்று நான் சொப்பனத்திலும் எண்ணவில்லை, பங்கஜம்!" என்றாள் செந்திரு.

"போனதைப் பற்றி இனிமேல் என்ன? கடவுள் அருளால் எல்லாந்தான் சந்தோஷமாக முடிந்து விட்டதே!" என்றாள் பங்கஜம்.

"கடவுள் அருள்தான்; சந்தேகம் என்ன? ஒரு தடவையா? இரண்டு தடவையா? கடைசியில்தான் பாரேன்! பெரியண்ணக் கவுண்டன் இன்னும் ஐந்து நிமிஷம் கழித்து வந்திருந்தால் என்ன நேர்ந்திருக்கும்? ஐயோ! நினைப்பதற்கே பயமாயிருக்கிறது" என்று செந்திரு கூறியபோது, அவளுடைய உடம்பு நடுங்கிற்று.

"என்ன ஆகியிருக்கும்? சொந்தப் பிள்ளையைத் தகப்பன் சுட்டுக் கொன்றிருப்பான்! எனக்கு என்ன அதிசயம் என்றால், அப்பேர்ப்பட்ட தகப்பனிடத்தில் இடீரென்று பிள்ளைக்கு இவ்வளவு வாஞ்சையும், பக்தியும் எப்படி உண்டாயிற்று என்பதுதான். உலக இயற்கைக்கே மாறாய்த் தோன்றுகிறது எனக்கு."

"கடவுள்தான் அவரைத் தண்டித்து விட்டாரே, பங்கஜம்! இனிமேல் சாகிற வரையில் அவர் படுத்த படுக்கையாய்த்தான் கிடக்க வேண்டுமாம். கைகால் சுவாதீனமே இராதாம். படுக்கையில் எழுந்து உட்கார வேண்டுமானாலும் இரண்டு பேர் பிடித்துத் தூக்கிவிட வேண்டுமாம். இப்படியாகிவிட்ட தகப்பனாரிடம் எந்தப் பிள்ளைக்குத்தான் கோபம் இருக்க முடியும்? அவரையாவது என்னையாவது பார்த்து விட்டால் போதும், கவுண்டருடைய கண்களில் ஜலம் பெருகி விடுகி





றது. ஏதோ பேசுவ
தற்கு முயற்சி செய்கி
ருர். வாய் குழறுகி
றது. உடனே அழுது
விடுகிருர். எனக்கே
எல்லாம் மறந்து
போய் அவரிடம் பரி
தாபமா யிருக்கிறது.
பெற்ற பிள்ளைக்கு
எப்படி இருக்கும்?''

''ஆமாமடி! நீ
கோயமுத்தூருக்கு

ஓடி வந்த கதையை அப்புறம் சொல்கிறேனென்றுயே ; சொல்லவேயில்லே, பார்த்தாயா? இப்போது சொல்லிவிடு. நாளைக்குக் கல்யாணம் ஆகிவிட்டால், அப்புறம் என்னேடு பேசுவதற்குச் சமயம் கிடைக்குமா? என்னைத் திரும்பித்தான் பார்ப்பாயா?''

'' நாங்கள் ஒன்றும் அப்படிப்பட்டவர்கள் அல்ல....''

''நாங்களா? அதற்குள்ளே பாத்தியதை கொண்டாடுகிறதைப் பார்த்தாயா ?''

''பரிகாசம் இருக்கட்டுமடி! கல்யாணம் ஆகிக் கையில் கங்கணத்துடன் அவர் சத்தியாக்கிரகம் செய்து ஜெயிலுக்குப் போகிருர் ; ஆறு மாதமோ, ஒரு வருஷமோ, எப்போது திரும்பி வருவாரோ, தெரியாது.''

''கல்யாணம் ஆகியும் பிரம்மச்சாரி, கடன் வாங்கியும் பட்டினி என்கிற கதைதான். அப்படி அவர் போகும் பட்சத்தில், நீ எங்களுடன் இருந்து விடு, செந்திரு!''

''அது முடியாதே, அம்மா! அவர் ஜெயிலுக்குப் போனுல் நானும் கூட வருவேன் என்று சொன்னேன். 'கூடாது; நீதான் என் தகப்பனரைப் பார்த்துக் கொள்ள வேண்டும்' என்ருர். அப்படியே பார்த்துக் கொள்வதாக வாக்களித்து விட்டேன்.''

''ஆகா! தகப்பனரிடந்தான் என்ன பக்தி! பிள்ளேயென்ருல் இப்படியல்லவா இருக்க வேண்டும்?....''

'' பல நாட்கள் கழித்துக் கிடைத்த அப்பா அல்லவா பங்கஜம்? மேலும் இவர் என்ன சொல்கிருர் தெரியுமா ? 'பகைவனுக்கு அருள்வாய்!' என்று பாரதியார் பாடியிருப்பதின் கருத்து இப்போதுதான் இவருக்கு விளங்குகிறதாம். மகாத்மா காந்தி போதிக்கும் அஹிம்சா தர்மத்தின் மேன்மையும் இப்போதுதான் நன்ருய்த் தெரிகிறதாம்..''

''அஹிம்சையாவது, தர்மமாவது ! நல்ல பைத்தியத்தை நீ கட்டிக் கொள்ளப் போகிருயடி! — ஆனுல் நீ மட்டும் என்ன இலேசா? ஏண்டி கட்டி! ரொம்ப நன்ருய்ப் பைத்திய வேஷம் போட்டாயாமே? அதோடேயா? யாரோ ஒரு சாமியார் தலையிலே கல்லைத் தூக்கிப் போட்டாயாமே?'' என்று பங்கஜம் சொல்லி வரும்போது, செந்திருவின் கண்களிலே ஜலம் ததும்பிற்று.

''அசடே! இதென்ன? எல்லாம் முடிந்த பிறகு இப்போதென்ன கண்ணீர்?'' என்ருள் பங்கஜம்.

''உனக்கு வேடிக்கையா யிருக்கிறதடி! ஐயோ! அந்த மலைப் பங்களாவில் நான் பட்ட கஷ்டத்தை நினைத்தால்...''

''போடி, போ! ஜாலக்காரி! நீ பட்ட கஷ்டங்களைப்போல் நூறு மடங்கு கஷ்டங்களை நான் அனுபவிக்கத் தயார், தெரியுமா?...'' என்று பங்கஜம் கூறி, செந்திருவின் காதண்டை வாயை வைத்து மெதுவாக, ''உனக்குக் கிடைத்ததுபோல் ஒரு காதலன் எனக்குக் கிடைப்பதாயிருந்தால் !'' என்ருள்.

செந்திருவின் முகம் மலர்ந்தது. அவள் பங்கஜத்தின் கன்னத்தைக் கிள்ளினுள்.

அச்சமயத்தில் ஏதோ சத்தம் கேட்க, இருவரும் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தார்கள். சற்றுத் தூரத்தில் மருடபதி ஓடையில் இறங்கித் தண்ணீரில் கையால் சலசலவென்று சத்தம் உண்டாக்கிக் கொண்டிருந்தான்.

உடனே, பங்கஜம், ''கிள்ளாதேடி! இதோ நான் போகிறேன்! 'அவர் வந்து விட்டார், நீ போய்த் தொலை' என்று மரியாதையாய்ச் சொல்வது தானே ?'' என்று எழுந்திருந்து போகத் தொடங்கினுள். வழியில் ஓடையருகில் நின்று, மருடபதியைப் பார்த்து, ''ஓய் தவிசுப்பிள்ளை! முன்மாதிரியெல்லாம் இனிமேல் ஏய்க்க முடியாது. நன்ருய்ச் சமையல் செய்ய வேணும். இல்லாவிட்டால் செந்திரு உம்மை இலேசில் விடமாட்டாள்'' என்ருள்.

மருடபதி அசட்டுச் சிரிப்புச் சிரித்தான்.

''அதோ பார்த்திரா? அங்கே ஒரு பைத்தியம் இருக்கிறது. ஜாக்கிரதை! ஒரே கூச்சல் போடும். அப்புறம் தலையில் கல்லைத் தூக்கிப் போட்டாலும் போடும்! கையைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டு வாயை இறுக்கி மூடிவிடும்!'' என்று சொல்லிவிட்டு விரைவாகப் பங்களாவை நோக்கிச் சென்ருள்.

அவள் மரங்களின் பின்னுல் மறையும் வரையில் பார்த்துக்கொண்டிருந்துவிட்டு, மருடபதி செந்திரு இருந்த இடத்தை நோக்கி நடந்தான்.

செந்திரு அவன் வருவதைக் கடைக் கண்ணுல் பார்த்தாள். உடனே சட்டென்று, முன்னைப் போல் தரையில் படுத்துக் கொண்டு கண்களையும் மூடிக் கொண்டாள். அவளுடைய இதழ்களில் வெட்கத்துடன்கூடிய புன்னகை மலர்ந்தது ; அவளுடைய அழகிய கன்னங்களில் குழி விழுந்தது.

அந்த மரத்தின் மேலே இரண்டு தூக்கணுங் குருவிகள் உட்கார்ந்திருந்தன. அவை தலையைச் சாய்த்துச் சிறிது நேரம் கீழே உற்றுப் பார்த்தன. பிறகு ஒன்றையொன்று பார்த்துப் பறவைகளின் பாஷையில் கலகல வென்று சிரித்தன.

(முற்றும்)

அவசரமான
காலைவேளையில்
ஐந்து செகண்டு
ஒதுக்குங்கள்






புத்துயிரளிக்கும்
நெஸ்கா:பே
ஒரு கப் தயாரித்து
அருந்துங்கள்!




முற்றிலும் சுத்தமான
காப்பி—தென்னிந்திய
காப்பி விதைகளிலிருந்து
தயாரிக்கப்பட்டது

# நெஸ்கா:பே

**உணர்ச்சி ஊட்டும் நெஸ்கா:பே**
**ஊக்கமளித்திடும் நெஸ்கா:பே!**

NCE 6367 ஒரு நெஸ்லே தயாரிப்பு




## 1. சங்கு ஒலித்தது!

மனிதர் தம்மை அமரர்களாக்கவே
ஆற்றல் கொண்ட பராசக்தியன்னை நல்
அருளினால் ஒரு கன்னிகையாகியே...

— பாரதியார்

ஜயராம்பாடி என்பது வங்கத்தில் பங்குரா மாவட்டத்தில் ஒரு கிராமம். அவ்வளவாகச் செழிப்பற்ற பங்குரா மாவட்டத்தில் ஜயராம்பாடியில் மட்டும் தானிய லக்ஷ்மியின் கடாட்சம் அதிகம். இயற்கை அன்னையின் நாட்டியமும் அங்கு விசேஷமாகப் பொலிந்தது. தெளிந்த நீரோடு ஆமோதர் என்ற ஓடை ஜயராம்பாடியை அணைத்து ஓடும். ஆங்காங்கே அது சுழித்து ஓடும் ஆழ்ந்த பகுதிகளில் மீன் வளம் அதிகம் உண்டு. வங்காளிகளில் பிராமணர்கள் உட்பட எல்லோருக்கும் இந்த 'ஜலபுஷ்ப'த்தில் ருசி உண்டு. அது அந்தத் தேசாசாரம். கிராமத்தின் வடக்கே ஆமோதர் நதி அழகிய தீபகற்பத்தை, அமைத்துத் தந்தது. அங்கே பச்சென்று வானோங்கிய விருட்சங்கள், உழைப்பாளிகளான மக்களை 'வா' என்றழைத்துக் குளிர் நிழல் தந்தன. பசுமையின் பறக்கும் ரூபமாகப் பலவித புள்ளினங்கள் அங்கு நிறைந்திருக்கும். பசுமையின் குரலை அவை பாடிப் பரப்பும். சாதுக்கள் அங்கு ஓடையிலே ஸ்நானம் செய்துவிட்டு ஆனந்தமாக அமர்ந்திருப்பார்கள். அவர்களது மனத்தின் காருண்யத்துக்கு அந்தப் பசும் சோலை வெளி உருவம் எனில், அதே மனத்தில் நிலவிய வைராக்கியத்துக்குச் சின்னம் போல் அப்பசுமைக்குப் பக்கலிலேயே ருத்ரபூமியும் இருந்தது.

பசுமைக்கு — ஜீவசக்திக்கு ஆதாரமான அம்பாள், அனைத்தையும் அழிக்கும் காளியாக, சிம்மவாஹினியாக, ஜயராம்பாடியில் கோயில் கொண்டிருந்தாள். வங்காளிகள் சக்தி வழிபாட்டில் தலைசிறந்து நிற்பவர்கள். நாம் அம்பாளைப் பொதுவில் லலிதையாக ஸௌம்ய ரூபத்தில் வழிபடுகிறோம். வங்காளிகள் மகாகாளியாகவே வழிபடுவார்கள்.

சிம்மவாஹினியை ஜயராம்பாடியின் நாயகியாக ஆக்கியவர் கேலாராம் முகர்ஜி. வங்காளத்தில் பிராமணர்களை முகோபாத்தியாயர் (முகர்ஜி), வந்தி



யோபாத்தியாயர் (பானர்ஜி), சட்டோபாத்தியாயர் (சட்டர்ஜி) என்ற பிரிவுகளாகக் குறிப்பிடுவார்கள். முகோபாத்தியாயப் பிரிவைச் சேர்ந்தவர் கேலாராம். ஒருசில நூற்றாண்டுகளுக்கு முன்பு வாழ்ந்தவர். பரம பக்தர், சிஷ்டர். அவர் வாழ்ந்த காலத்தில் வங்கம் பௌத்த மதத்திலிருந்து மீண்டும் ஹிந்து சமயத்துக்குத் திரும்பிக் கொண்டிருந்தது.

புத்தரின் போதனையில் உருவம் படைத்த கடவுளுக்கு இடமே இல்லை. ஆனால் பௌத்தம் பொதுமக்களின் மதமாவதற்குப் புத்தரே கடவுளாக்கப் படவேண்டியிருந்தது. ராமாயண, பாரதக் கதைகளைத் தழுவி புத்தரின் ஜாதகக் கதைகள் உருவாயின. அதுவும் போதாமல் ஹிந்துமதத்தில் பல தெய்வ மூர்த்தங்களை வழிபடுவதுபோல், பௌத்தத்திலும் பல தேவதைகள் கூறப்பட்டு, அவற்றுக்கு வழிபாட்டு முறைகள் வகுக்கப்பட்டன. அவற்றில் 'தர்மம்' என்பது ஒன்று. பூர்வத்தில் ஜயராம்பாடியின் சமய வாழ்வுக்கு மையமாக இருந்தது 'தர்ம'த்தின் ஆலயம்தான். நாளடைவில் பௌத்தமும் ஹிந்து மதமும் பின்னிப் பிணைந்தன. தர்மம் ஹிந்துக்களுக்கும் தெய்வமாயிற்று. 'தர்ம'த்துக்கு வழிபாடு நடத்துவதற்கென்றே சைதன்ய சிம்மன் என்ற விஷ்ணுபூர் அரசன் உத்தம அந்தணராகிய கேலாராம் முகர்ஜியை ஜயராம்பாடிக்கு அனுப்பி வைத்தான். அவருக்கு ஆறு காணி பூமியும் சாசனம் செய்தான்.

கேலாராமின் குலதெய்வம் ராமன். அவரது இஷ்டதெய்வம் சிம்மவாஹினி. இதிலும் ஒரு பொருத்தம், அவருடைய பெயரிலேயே 'ராமன்' இருக்கிறான். அவரை அனுப்பிய மன்னன் பெயரில் 'சிம்மம்' இருக்கிறது !

கேலாராமும் அவரது சந்ததியாரும் தங்களது நல்லியல்புகளால் ஜயராம்பாடி மக்களைக் கவர்ந்தனர். அவர்களையே மக்கள் புரோகிதராகவும், அர்ச்சகராகவும் கொண்டனர். இது காரணமாக அவர்களது இஷ்ட தெய்வமான சிம்ம வாஹினிக்கும் யோகம் அடித்தது. ஏற்கனவே அந்தக் கிராமத்தில் இரண்டாம் பட்சமாக விளங்கிய சிம்மவாஹினி ஆலயம் இப்போது சிறப்புப் பெறலாயிற்று. கேலாராம் வந்தபின்பு ஹிந்து சமய உணர்வு அங்கு அதிகமாயிற்று. எனவே, அந்த ஹிந்துக்களின் வழிபாட்டில் 'தர்மம்' இடம் பெற்ற போதிலும், 'அசல்' ஹிந்து தெய்வமான சிம்ம வாஹினிக்கு 'மௌசு' அதிகமாயிற்று. அவளே அந்த ஊரின் முக்கியமான தெய்வமானாள். ஆயினும் சிம்மவாஹினி ஒரு சாமானியக் குடிசையிலேயே குடிகொண்டிருந்தாள். வங்கத்தில் சிறிய கோயில்கள் வீடுபோலவே தோற்றமளிக்கும். எளிய மக்களுக்கு ஏற்ற எளிய தெய்வங்கள். (நம் 'அம்மா'வினால் ஜயராம்பாடி பெருமை பெற்றபின், இப்போது சிம்மவாஹினிக்கும் சற்றே விசாலமான ஆலயம் ஏற்பட்டிருக்கிறது.)

சிம்மவாஹினி குடிசையில் இருந்த போதே 'தர்ம'த்துக்குச் செங்கல்லால் கட்டிய கோயில் இருந்தது. 'தர்மம்' என்றால் அந்த விக்கிரகம் எப்படியிருக்கும், அதற்கு எத்தனை கைகள், என்னென்ன ஆயுதங்கள் வைத்திருக்கும் என்ற கேள்விகள் எழுகின்றன அல்லவா? தர்மத்துக்குக் கையும் கிடையாது, காலும் கிடையாது, ரூபமே கிடையாது. நாலு கால்களுடன்கூடிய ஒரு மணைப் பலகையைத்தான் 'தர்மம்' என்று வழிபட்டனர். மணைப் பலகை, நம் பக்கத்தில் ஏழை எளியவர்கள் வழிபடும் மஞ்சள் பூசிய செங்கல், வடக்கே புரிஜகந்நாதம் போன்ற ஸ்தலங்களிலுள்ள அங்கலட்சணமற்ற மூர்த்தங்கள் — இவற்றைப் பார்த்தால் நிஜ் கலை உணர்வுபெற்ற நமக்கு பக்தி ஏற்படாமல் இருக்கலாம். ஆனாலும் கோடானு கோடி மக்கள் இவற்றை வழிபட்டு, அருள் பெற்று வருகிறார்கள்.

தவம், தூய்மை, தயை, சத்தியம் என்ற நாலு கால்கள் கொண்டது தர்மம் என்று நமது சமய நூல்கள் கூறுகின்றன. பரமேசுவரனைத் தாங்கும் நாலு கால் கொண்ட ரிஷபம் தர்மத்தின் வடிவமே. சிம்மவாஹினியான காளியைத் தாங்கும் சிம்மமும் தர்ம வடிவமே. உயர்ந்த அநுபூதியில் ஞானிகள் ரிஷபமாக, சிம்மமாகக் கண்டதையே, நாலு கால் மணையாகப் பாமரர்கள் வணங்கினர். ஜயராம்பாடி ஹிந்து கிராமமானபின் 'தர்மம்' ஹிந்து தெய்வமாகி விட்டது. இப்போது அதற்கு 'யாத்ரா ஸித்திராயன்' என்று பெயர் வைத்துவிட்டனர். அம்மக்கள் யாத்திரை போவது அபூர்வம்தான். யாத்திரையை நல்லபடி முடித்துத் திரும்புவது அதைவிட அபூர்வம். கல்கத்தாவிலிருந்து சுமார் அறுபதே மைலில் உள்ள கிராமம் அது. ஆனால் இந்தக் கதை தொடங்கும்போது இந்த அறுபதே மைல்களைக் கடக்க மூன்று, நாலு நாட்கள் பிடிக்கும். காட்டு வழி. ஒரே கள்ளர் பயம். பணக்காரர்கள் தாம் வண்டியோ பல்லக்கோ வைத்துக் கொள்ள முடியும். மற்றவர்கள் நடந்து தான் செல்ல வேண்டும். ஆனால் அப்படிச் செல்கிறவர்களும் மிகக் குறைவு. ஏனெனில், அம்மக்கள் கல்கத்தா செல்வதற்கு அவசியமே இருக்கவில்லை. இந்த நாள் 'வசதி'களோடு ஒப்பிட்டால் அன்றைய ஜயராம்பாடியின் சுகவாழ்வுக்கு ஏதுமே இல்லை என்றுதான் தோன்றும். ஆனாலும் அந்தக் காலத்தில் — 'அந்த'க் காலம் என்பது வேறேதோ யுகத்தையோ, சகாப்தத்தையோ குறிப்பிடவில்லை; ஒரு நூற்றாண்டுக்கு முந்தைய காலம்தான் அது — மக்களுக்குத் தங்கள் கிராம எல்லையை விட்டு வெளிச் செல்ல வேண்டிய தேவையே இருக்கவில்லை. வேண்டிய நெல்லும், கோதுமையும், கரும்பும், காய்கறியும், பருப்பு வகைகளும், மிளகாயும், மஞ்சளும் அந்தக் கிராமத்திலேயே கிடைத்தன. வங்காளிகளுக்கு மெத்தப் பிடித்த இனிப்புக்கள் வாங்க வேண்டுமானால் மூன்றே மைலில் காமார்புகூர் இருந்தது. (ராம கிருஷ்ணர் என்ற இனிப்பு பிறந்த ஊர் அதுதான்!) துணிமணி, உப்பு, மசாலாப் பொருட்கள் வாங்க வேண்டுமானால் ஐந்து மைலில் உள்ள கோதுல்பூர் அல்லது சுயாபாத்—பதன் கஞ்ஜுக்குப் போவார்கள். அந்த மக்களுக்கு வாழ்க்கை நடத்த இதைத் தவிர வேறெதுவுமே தேவையாக இருக்கவில்லை. இன்று இத்தனை வசதிகளுடன் நாம் இருப்பதைவிட நிம்மதியாகவும், திருப்தியாகவும் வாழ்ந்தார்கள். அவர்கள் எப்போதேனும் கல்கத்தாவுக்குச் சென்றாலும் அதை ஏதோ அக்கரைச் சீமைக்குப் போவது போல் கருதி (அதுவும்கூட இன்று தண்ணீர் பட்ட பாடாகிவிட்டது) ஸ்வாமிக்கு நேர்ந்து கொண்டுதான் கிளம்புவார்கள். எனவேதான் யாத்திரைகளை



நல்லபடி முடித்துக் கொடுக்க யாத்ரா வித்திராயனை ஒரு தெய்வம் அவர்களுக்குத் தேவைப்பட்டது.

ராமசந்திர முகர்ஜி அத்தகைய ஒரு யாத்திரைக்கு ஆயத்தம் செய்து கொண்டிருந்தார். 'யாத்திரை' என்றவுடன் வழிபாட்டை லட்சியமாகக் கொண்ட பயணம் என்று எண்ண வேண்டாம். வழிபாட்டுக்கு அல்ல, வயிற்றுப்பாட்டுக்காகவே ராமசந்திர முகர்ஜி ஜயராம்பாடியிலிருந்து கல்கத்தா செல்வதற்கு உத்தேசித்திருந்தார்.

அவர் கேலாராமின் பரம்பரையில் வந்தவர். பாரம்பரிய குண நலன்கள் அவரிடம் கூடுதலாகவே பொலிந்தன. ராமா ராமா என்று சொல்லிக் கொண்டே இருப்பார். நேர்மையாளர். ஆசாரக்காரர். ஆனாலும் எல்லோருக்கும் சமமான அன்பை வழங்குவதில் குறைவில்லை. வங்காள வழக்கப்படி இந்த ஆசாரப் பிராமணரும் குழாய் பிடித்துப் புகைப்பார். வீட்டு வழியே போகிறவர்களையும், "தம்பீ, ஒரு இழுப்பு இழுத்துவிட்டுப் போ" என்று பரிவுடன் அழைத்து உட்கார வைத்து அவர்களிடம் குழாயைக் கொடுத்து, அதில் புகையிலையைத் திணித்துக் கொண்டேயிருப்பார்.

இந்தப் புருஷக் கைக்கே இத்தனை தாராளம் என்றால் அந்த இல்லத்துப் பெண்மணியின் கையைக் கேட்க வேண்டுமா? ராமசந்திரரின் மனைவி சியாமசுந்தரிக்கு இதயம் சொக்கத் தங்கம். சொக்கத் தங்கம் என்றால் பித்தலாட்டம் சேராதது என்பது நேர் அர்த்தம். 'ஆடகம்' என்ற பொன்னோடு 'பித்தளை' சேர்ந்தால் 'பித்தலாடகம்'-'பித்தலாட்டம்' என்று பொது வழக்கில் சொல்வது. சியாமசுந்தரி 'வஞ்சனையின்றி, பகையின்றி, சூதின்றி' வளர்ந்தவள். உலக வாழ்வின் 'சாதுரியம்' ஏதும் அவளுக்குத் தெரியாது. அவளுக்குத் தெரிந்தது, கிராமத்துக் கட்டையான தன் உரமேறிய உடம்பால் உழைத்து, வந்தவர்களுக்கு அன்னம் பாலிப்பதுதான்.

"என் அம்மா லக்ஷ்மியென்றே சொல்லணும். வருஷம் முழுதும் அந்தந்தப் பருவத்தில் கிடைக்கும் பண்டங்களை வாங்கி வீட்டை சுபிட்சமாக வைத்திருந்தாள். 'இந்த அகம் பகவானுக்கும் பாகவதானுக்கும் என்றே ஏற்பட்டது' என்று சொல்லிக் கொண்டு எல்லாருக்கும் வாரி வாரிக் கொடுப்பாள்" என்று தன் அம்மாவைப் பற்றி நம் அம்மா சொல்லியிருக்கிறாள்.

இதென்ன பாப்பா மலர் கதை போல இப்படி ஒரு நல்ல அப்பா அம்மாவா என்று எண்ண வேண்டாம். இந்த உலகில் அறிவு, ஆற்றல், ஞானம், வித்தை இவற்றில் பெரியவர்களாகச் சிலர் இருப்பது போல், இந்தச் சிறப்புக்கள் விசேஷமாக இல்லாமலே முழுக்க முழுக்க நல்லவர்களாகவும் ஒரு சிலர் இருக்கத்தான் செய்கிறார்கள். பெரிய தவத்தாலும், பிரம்மசரியத்தாலும், சத்தியத்தாலும் அடையப்படுகிற பிரம்மலோகத்தைச் சூதும், பொய்யும், வஞ்சனையுமற்ற இந்த எளிய நல்லவர்களும் பெறுகிறார்கள் என்கிறது பிரச்ன உபநிஷதம். மகாத்மாக்கள் வந்து பிறப்பதற்கென்றே இப்படிப்பட்ட உத்தம இருகங்கள் சிலவும் இருக்கும்.

ராமசந்திரருக்கு மூன்று தம்பிகள். எல்லோரும் ஒன்றாகவே வாழ்ந்தனர். எல்லோரும் சேர்ந்து வாழும் அவிபக்த குடும்ப முறையே அப்போது நம் தேசத்தில் எங்கும் நிலவி வந்தது. இது பெரிய குடும்பம்தான். அதில் தலைமகன், தலைமகள் இருவருமே பரம தயாளுக்கள். ஆனால் அப்படித் தயாளம் காட்டும்படியாக அந்தக் குடும்பத்துக்குச் சொத்து சுதந்திரம் கிடையாது.

எனவே, கஷ்டதசை வந்தது. கஷ்டதசையிலும் முடிந்த மட்டும் அன்ன தானம் செய்து வந்தனர்.

இப்போது ராமசந்திர முகர்ஜிக்குப் பெரிய 'பொருளாதார நெருக்கடி.' கல்கத்தாவுக்குப் போய் ஏதோ ஒரு விதத்தில் பணம் திரட்டி வரத் தீர்மானித்தார். யாத்திரைக்கு ஆயத்தம் செய்தார்.

கிளம்புவதற்கு முதல் நாள் அவருக்கு ஒரு கனவு. கனவு என்று தள்ளிவிட முடியாத கனவு. இந்தப் பொய்யான உலகத்தில் நனவு என்று சொல்லும் விழிப்பு நிலையில் நடக்கிறவற்றை விட அவரது உள்ளத்தை வெள்ளமாக மகிழ்ச்சியில் நனைத்த கனவு அது.

ஆனந்த சாகரத்தின் மதகைத் திறந்துவிட்டது போல் தமது முதுகில் ஏதோ ஒரு வெள்ளம் வந்து கனமாகப் படிந்திருப்பதை ராமசந்திரர் உணர்கிறார். கழுத்தை வளைத்துப் பார்க்கிறார். பார்த்த கண்கள் பார்த்தபடி நிலைக்குத்திட ஆசைப்படுகின்றன. ஆனாலும் அந்தப் பிரகாசம் கண்களைக் கூச வைக்கிறது.

பெண் குழந்தை ஒன்று அவரறியாமலே பின்புறமாக வந்து அவரது முதுகைக்கட்டிக்கொண்டிருக்கிறது. ஸ்வர்ண விக்கிரகம் போல் தகதகக்கிறது அதன்



தேகம். விலை மதிக்கவொண்ணாத வைர வைடூரிய ஆபரணங்கள் அணிந்திருக்கிறாள் சிறுமி — 'என் தேக காந்தியில் எந்த ரத்தினமும் எடுபடாது' என்று காட்டுவதற்கே போல். நகைகளுக்கெல்லாம் மேலான நகையாக அவளது திருமுகத்தில் புன்னகை கொழிக்கிறது. ஒரே அழகு, ஒரே அன்பு. அவை ராமசந்திரரைக்கட்டி இறுக்குகின்றன. அதே சமயத்தில் இது சாதாரண விஷயமல்ல என்ற விலவிலப்பு உண்டாகிறது. ஆனாலும் விலக முடியவில்லை. விலக மனசு இடம் தராதது மட்டும் காரணமல்ல; அந்தப் பெண்ணே அவர் விலகிப் போகாதவாறு அவரை இறுகக் கட்டி இருக்கிறாள்.

போயும் போயும் தன்னையா இந்த அற்புதக் குழந்தை அணைத்து விளையாடுகிறது? அடையாளம் தெரியாமல் இங்கே வந்து விட்டதா?

ராமசந்திரர் ஆச்சரியத்துடன் அந்தக் குழந்தையிடம், ''நீ யாரம்மா? எங்கே வந்தே?'' என்கிறார்.

''உங்காத்துக்குத்தான் வந்திருக்கேன். உன்கிட்டத்தான் வந்திருக்கேன்'' என்கிறது பாலை வக்கணையாக.

தாமரை போன்ற நேத்திரத்தை விரித்து அதற்குள் குண்டு வண்டுபோல் குறுகுறுக்கும் விழிகளால் விநோதமாகப் பேசுகிறாள் குழந்தை.

ராமசந்திரருக்கு உடல் குலுங்குகிறது.

நித்திரை கலைகிறது.

ஸ்வர்ண வர்ணத்தில் வந்த அந்தப் பெண் யார்?

''ஹிரண்யவர்ணாம் ஹரிணீம், ஸுவர்ண ரஜதஸ்ரஜாம்'' என்று அவரது உள்ளம் ஸ்ரீஸூக்தத்தைக் கிசுகிசுக்கிறது.

அப்புறம் அவர் கல்கத்தாவுக்குப் போனதும், அங்கே ஏதோ திரவிய லாபமடைந்து திரும்பியதும் சாதாரண விஷயங்கள்.

அவர் அடைந்த உண்மை லாபம்—ஆத்ம லாபம் அந்தக் குழந்தையேதான்.

இந்தச் சம்பவம் நடந்தபோது சியாமசுந்தரி ஜயராம்பாடியில் இல்லை. அங்கிருந்து மேற்கே ஒரு மைலில் இருந்த ஷியாட் என்னும் கிராமத்துக்குச் சென்றிருந்தாள். ஷிஹார் என்பது அதன் பெயர்; ஷியாட் என்றே கிராம ஜனங்கள் சொல்வார்கள். அதுதான் சியாமசுந்தரியின் பிறந்தகம்.

ஜயராம்பாடியில் லீலை செய்த பாலை அங்கும் விளையாடினாள்.

சியாமசுந்தரி கனாக் காணவில்லை. நன்றாகக் கண்களை விழித்துக் கொண்டேயிருந்தாள். அந்தி மங்கி விட்டது. ஜயராம் பாடிக்குத் திரும்பும் வழியில் குயவர்களின் சூளைப் பக்கத்தில் ஒரு வில்வ மரத்தடியில் சியாமசுந்தரி அமர்ந்து விட்டாள் தனியளாக.

வானத்தில் நட்சத்திரங்கள் பூத்தது போல், அந்த மௌனத்தில் கிணுகிணு என மணிநாதம் பூத்தது.

சப்தம் வந்த திசையில் கண்ணால் துழாவினாள் சியாமசுந்தரி.

விருட்சத்தில் வழுக்கிக் கொண்டே இறங்கி வந்தாள் ஒரு குழந்தை. அவளது 'சீர் சிறக்கும் மேனி பசேல் பசேலென, நூபுரத்தின் ஓசை கலீர் கலீரென' சியாமசுந்தரியை நெருங்கி நெருங்கி, இன்னும் நெருங்கி வந்தாள்.

அவள் அடி எடுத்து வைக்க வைக்க, இவள் இதயத்திலேதான் அதென்ன நெருக்கம்!

கிட்டத்தில் வந்த குழந்தை, கபடமறியாத சியாமையின் கழுத்தில் தனது கொழு கொழுக் கையை வளைத்து அப்படியே கட்டிக் கொண்டது.

அந்த இனிமையை சியாமசுந்தரியால் தாங்கவே முடியவில்லை.

சியாமசுந்தரிக்கு ஏன் இப்படி இருட்டிக் கொண்டு வருகிறது? வெளி இருட்டு அவ்வளவும் அவளுக்குள் புகுகிறதா? அல்லது அந்த இருட்டேதான் பிரகாசமா — கருத்த காளியேதான் உதய சூரிய வண்ணத்து லலிதையும் என்பதே போல்? அவளை அந்த ஒளிக் குழந்தையே இருள் உருவில் ஆட்கொள்கிறதா? இல்லை, அவள்தான் அதை உட்கொள்கிறாளா? சியாமசுந்தரியின் இதயத்தில் நெருக்கமாக இருந்த ஸ்வர்ணசுந்தரி இப்போது அவளது உதரத்தில் சியாமள சுந்தரியாகப் புகுந்து விட்டாற் போல் இருக்கிறது!

மூர்ச்சித்து விழுந்தாள் சியாமசுந்தரி.

அவளைக் காணாமல் விட்டார் அலறிப் புடைத்துக் கொண்டு வந்து பார்த்தனர். அவர்கள் சுசுருஷை செய்தபின் தான் அவளுக்கு மயக்கம் தெளிந்தது.

அன்றிலிருந்து சியாமசுந்தரியிடம் தான் எப்பேர்ப்பட்ட அமாநுஷ்யமான தெளிவு குடிகொண்டது?

ஜயராம்பாடிக்குத் திரும்பிய சியாமசுந்தரியைப் பார்த்து ஊரே ஆச்சரியப்பட்டது. 'சியாமா மாமிக்கு என்னமா அழகிட்டிருக்கு, பாத்தியா? பெண் தான் பிறக்கும்' என்று பெண்டுகள் பேசிக் கொண்டனர். அந்த 'மகா லக்ஷ்மி'க்குத் துணியும் மணியுமாக ஏகப் பரிசுகள் தந்தனர்.





# மகா "கனம்" பொருந்திய மறை விழா

செப்டம்பர் முதல் தேதியிலிருந்து மூன்று வாரங்கள் கூட்டம் கூட்டமாக மகாஜனங்கள் தியாகராய நகர் சிவ விஷ்ணு ஆலயத்துக்குச் சென்றவண்ணம் இருந்தனர். அங்கு என்ன பிரமோத்ஸவமா? இல்லை. இசைக் கச்சேரியா? அதுவும் இல்லை. கதாகலாக்ஷேபமா? அதுவும்கூட இல்லை. இத்தனைக்கும் ஆதாரமான வேத பாராயணம்தான் கூட்டம் கூட்டமாக மக்களைக் கவர்ந்திருந்தது. வேத பாராயணத்துக்கு எத்தனை ஆகர்ஷணம் உண்டு என்பது நிதரிசனமாகத் தெரிந்தது.

கிருஷ்ண யஜுர் வேதத்தை சம்பூர்ணமாக "கனம்" என்ற பத்ததியில், வேத பர்வதமாக விளங்கும் ஆந்திர தேச வித்துவான்கள் நால்வர் பாராயணம் செய்தனர். வேத மந்திரங்களின் பதங்களை முன்னும் பின்னுமாக மாற்றி மாற்றிப் பின்னல் கோலாட்டம் இடுவதுபோல் அமைக்கிற ஒரு முறைக்கு "கனம்" என்று பெயர். இயற்கையாகவே கம்பீர எழில் வாய்ந்த வேதமந்திரங்கள் "கன"மாக ஓதப்படும்போது எலும்புக் குருத்துக்குள்ளேயே பிரவேசித்து நம்மைச் சிலிர்க்க வைக்கின்றன. கனம் சொல்வதில் அதிசய ஆற்றல் பெற்ற பிரம்மஸ்ரீமான்களான கனசிகரம் கஜுபல்லி வேங்கட நாராயண கனபாடிகள், குனபுலி லக்ஷ்மி நரசிம்ம கனபாடிகள், சிட்டி சுப்பிரமணிய கனபாடிகள், கன சூடாமணி ஜி. ஆஞ்சநேய கனபாடிகள் ஆகிய ஆந்திர வித்துவான்கள் ஸ்ரீ காமகோடி ஆசாரியாளின் அநுமதிப்படி சென்னைக்கு வந்து, கிருஷ்ண யஜுர் வேதம் முழுவதையும் பொழிந்து தள்ளியது சென்னையின் பாக்கியம். இந்தப் பாக்கியத்தை உணர்ந்து, நகரப் பெருமக்கள் இந்த சத்பாத்திரங்களுக்கு உரிய சம்மானங்களைச் செய்தனர். மேலும் பல பேட்டைகளிலும் 'கனம்' கனஜோராக நடக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது.

பல பிரிவினைச் சக்திகளுக்கிடையே சமயமும், பக்தியும், கீதமும், வேதமும்தாம் தேசத்தை ஒன்றாக்கி வருகின்றன என்பதற்கு ஆந்திர அந்தணோத்தமர்கள் "கன"த்தை கானம் செய்தே சென்னையைக் கவர்ந்ததும் ஒரு சான்றாயிற்று.

---

அந்த அழகின் அமாநுஷ்யத் தன்மை ராமசந்திரருக்குத் தெற்றெனத் தெரிந்தது. அன்றிலிருந்து அவள் தலைச்சனைப் பெற்றெடுக்கும் வரையில் அவர் அவளுக்கு அருகிலேயே வந்தாரில்லை. எட்ட நின்றே மானசிகமாக வணங்குவார்.

மாதங்கள் ஓடின. வங்காளிக் கணக்கில் பௌஷ்ய மாதம். நமது மார்கழி. தேதி எட்டு. (1853 டிசம்பர் 22). அன்று குரு வாரம். இருள் விரிகிற சமயத்தில், வெள்ளை வெளேரென்று ஒரு சங்கு ராமசந்திர முகர்ஜியின் வீட்டு வாசலில் ஓங்காரத்தை ஒலித்தது. புதுப் பிரஜை ஒன்று இந்த மண்ணிலே உதித்திருக்கிறது என்பதே அந்த சங்கநாதத்தின் அர்த்தம். (தொடரும்)

# எதிர்ப்பிலே கண்ட வெற்றி





- ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு விஜயம். அவருக்கு வலதுபுறம் டாக்டர் சாந்தாவும் டாக்டர் கிருஷ்ணமூர்த்தியும்.
- சஸ்திர சிகிச்சை.

அமரர் 'கல்கி' அவர்கள் எழுதிய 'கள்வனின் காதலி'யில் கல்யாணி காதலனைக் கேட்கிறாள்: ''மனிதர்கள் ஏன் இவ்வளவு சின்னத்தனமாக நடந்து கொள்கிறார்கள்? நமது காதல் ஈடேற ஏன் இத்தனை இடைஞ்சல்கள்?''

முத்தையன் பதில் கூறுகிறான்: ''நமக்குத் தொல்லை தரும் அவர்கள் மகராஜன்களாய் இருக்கட்டும்! ஏனெனில், எதிர்ப்பிலே காணும் வெற்றியிலேதான் கண்ணே, இன்பம் இருக்கிறது!''

அடையாறு புற்றுநோய் மருத்துவமனையின் சரித்திரத்தை ஆராயும்போது நமக்குக் கல்கி அவர்கள் எழுதியதன் முழுப் பொருளும் விளங்குகிறது.

இந்த மருத்துவமனை எழும்பத்தான் எத்தனை இடையூறுகள்! எவ்வளவு சில்லறைத் தொல்லைகள்! எத்துனை அற்பத்தனமாகப் பலர் நடந்து கொண்டிருக்கிறார்கள்! ஆயினும், இத்தனையையும் எதிர்த்துச் சமாளித்து வெற்றி கண்டதாலும், இந்த மருத்துவமனையில் ஆரம்ப முதல் இருந்து நிர்வகித்து வருவோருக்கு இன்று ஏற்படும் பெருமிதமோ சொல்லில் அடங்காததல்லவா!

ஒருமுறை அரசினரின் மான்யம் வந்து சேரக் காலதாமதமானபோது காரியதரிசி டாக்டர் சாந்தா, அதற்குரிய அதிகாரியை அணுகினார். அப்போது அந்தச் சர்க்கார் ஊழியர், ''உங்களுக்கு அது ஆஸ்பத்திரியாக இருக்கலாம்; ஆனால் என்னைப் பொறுத்த வரையில் அது கவனிக்கப்பட வேண்டிய எத்தனையோ கேஸ்களுள் ஒன்று!'' என்று சொல்லி அனுப்பிவிட்டார்.

ஏன், இந்த மருத்துவ மனையின் ஸ்தாபகர் ஸ்ரீமதி முத்துலக்ஷ்மி ரெட்டிக்கு ஏற்பட்ட அனுபவத்தைத்தான் பாருங்களேன்: ''ஆஸ்பத்திரிக்கென்று நிலம் ஒதுக்குவது என்பதென்னவோ முடிவாகி விட்டது. மவுண்ட் ரோட்டை யொட்டித் தேனாம்பேட்டைப் பகுதியில் உள்ள விசாலமான இடத்தை இதற்கென்று தரக் கூடாதா?'' என்று கேட்டார் டாக்டர் முத்துலக்ஷ்மி ரெட்டி.

அரசு ஊழியர் பதிலளித்தார்: ''அதெல்லாம் முடியாது! அடையாற்றில் உள்ள இந்த இடத்தை ஏற்பதானால் சொல்லுங்கள்; இல்லை யென்றால் போய் வாருங்கள்!''

''பக்கிங்ஹாம் கால்வாய்க்கு அருகில் உள்ள இந்த இடத்தில் கட்டடங்கள் எழுப்புவது உசிதமில்லை என்று இன்ஜினீயர்கள் சொல்கிறார்களே! ஏன், மவுண்ட்ரோட்டை ஒட்டியுள்ள அந்த இடத்தை ஒதுக்குவதில் உங்களுக்கு என்ன சிரமம்?'' என்று கேட்டார் டாக்டர் முத்துலக்ஷ்மி ரெட்டி.

''ஆ! அங்கே கால்ஃப் ஆட்ட மைதானம் அமையவிருக்கிறது; அதைத் தருவதா? நோ, நோ!'' என்று அடித்துச் சொன்னார் அதிகாரி.

'ஆமாம், புற்றுநோய் சிகிச்சையைவிட கால்ஃப் ஆட்டம் ரொம்ப முக்கியமானதுதான்' என்று டாக்டர் முத்துலக்ஷ்மி முணுமுணுத்துக் கொண்டே அவர் மனமுவந்து கொடுத்ததைப் பெற்றுக் கொண்டு வந்து சேர்ந்தார்.

இன்னொரு சந்தர்ப்பத்தில் இயக்குனர் டாக்டர் கிருஷ்ண மூர்த்தி இதைவிடக் கொடூரமான சொற்களைக் கேட்க நேர்ந்தது. அதுவும் அரசினரின் மருத்துவத் துறை உயர் அதிகாரியிடமிருந்தே! ''பணமில்லையா? பணமில்லையானால் ஆஸ்பத்திரியை மூடிவிட்டுப் போங்களேன், ஐயா!'' என்றார் அந்தப் பெருமகன்!

மனிதாபிமானம் என்பதே இல்லாமல் போய் விட்டதோ என்று நினைக்கத் தோன்று கிறதல்லவா? இவ்வாறெல்லாம் எத்தனையோ வேதனைகளைத் தாங்க நேர்ந்தாலும் நிர்வாகிகள் மனம் தளர்ந்து போகாமலிருக்க நல்லவேளையாகத் தீர்க்க தரிசனம் மிக்க தலைவர்கள் சிலர் அவ்வப்போது ஆபத்பாந்தவர்களாகத் துணை நின்றுர்கள். ராஜாஜி, காமராஜ், நேருஜி, கோவிந்த வல்லப பந்த், சி. சுப்பிரமணியம், அண்ணுதுரை போன்ருேர் இம் மருத்துவ மனையின் முக்கியத்துவத்தை உணர்ந்து சிவப்பு நாடாக்களைத் தக்க தருணத்தில் கத்தரித்து எறிந்து புற்று நோய்ச் சிகிச்சையும் ஆராய்ச்சியும் மேலும் வளர உதவியிருக்கிறுர்கள். தமிழகத்துப் பெருந்தனக்காரர்கள், தொழிலதிபர்களின் வள்ளல்தன்மை, அயல் நாட்டுச் செல்வந்தர்களும் காட்டிய அன்பு, கிறிஸ்துவ மத நிறுவனங்களின் நன்கொடை, இவை எல்லாவற்றுக்கும் மேலாக டாக்டர் முத்துலக்ஷ்மி ரெட்டி, டாக்டர் கிருஷ்ணமூர்த்தி, டாக்டர் சாந்தா போன்ருேரது அயராத உழைப்பு-இவையெல்லாம் சேர்ந்து அடையாறு புற்றுநோய் மருத்துவ மனையின் அந்தஸ்தை உலகம் மதிக்கும் அளவுக்கு உயர்த்தியிருக்கின்றன. டாக்டர் சாந்தா நிமிஷத்துக்கு ஒரு தடவை கூறுவதுபோல் ஆண்டவன் அருளும் கூடியிருக்கிறது.

துன்பங்கள் நேரும்போது, 'ஆண்டவனே, ஏன்தான் இப்படி வேதனைப் படுத்துகிறுயோ?' என்று எண்ணிக் கஷ்டப்படுகிறேம். ஆனல் பல சந்தர்ப்பங்களில் அந்தத் துன்பங்களின் பின் விளைவாகப் பல மகத்தான சாதனைகள் நிகழ்வதையும் காண்கிறேம். 'ஓ! இப்படி ஒரு பெரு நன்மை விளையத்தான் அன்று ஆண்டவன் அப்படிச் சோதித்தானே' என்று மனம் தேறுகிறேம்.

இத்தகைய ஒரு துயர நிகழ்ச்சி டாக்டர் முத்துலக்ஷ்மி ரெட்டியின் வாழ்க்கையில் ஏற்பட்டது. தமது சகோதரி புற்றுநோயினுல் இரண்டு ஆண்டுகள் அவதிப்பட்டுக் கடைசியில் துடிதுடித்துச் சாவதை [அருகிலிருந்து பார்த்தார்



டாக்டர் முத்துலக்ஷ்மி. அந்நாட்களில் புற்றுநோய் பற்றி டாக்டர்கள் அதிகமாக அறிந்திருக்கவில்லை. ஒருவருக்குப் புற்றுநோய் என்று கண்டுபிடிப்பதே அரிதாயிருந்த காலம். அப்படிக் கண்டு பிடித்தாலும் குணப்படுத்தவே முடியாது என்ற கருத்து நிலவியது. புற்றுநோய் முதியவர்களுக்குத் தான் வரும், பெரும்பாலும் பெண்களே பாதிக்கப்படுவார்கள் என்றெல்லாம் தவருன அபிப்பிராயங்களை அறிஞர்களே கூடக் கொண்டிருந்தார்கள். இத்தகைய சூழ் நிலையில் டாக்டர் முத்துலக்ஷ்மி ரெட்டி தமது சகோதரி சுந்தரத்துக்கு என்ன சிகிச்சை அளித்துவிட முடியும்? ''அக்கா, நான் செத்துப் போவதே மேல்! இந்த வேதனையைத் தாங்க முடியவில்லை. சீக்கிரம் சாகமாட்டேனு?''

என்று சுந்தரம் புலம்புவதைக் கேட்டுக் கொண்டிருந்த முத்துலக்ஷ்மி ரெட்டியின் மனத்தில் ஒரு வைராக்கியம் ஏற்பட்டது. எப்பாடு பட்டாவது புற்று நோய் மருத்துவமனை ஒன்று அமைக்க வேண்டும். அதில் புற்றுநோய் சிகிச்சை அளிப்பதுடன் அந்நோய் பற்றிய ஆராய்ச்சிகளும் நடக்க வேண்டும் என்று மனத்தில் உறுதி செய்து கொண்டார்.

ஆனல் அது என்ன அவ்வளவு சுலபமாக நடக்கிற காரியமா? பணத்துக்கு எங்கே போக? அறிஞர்களே புற்று நோய் பற்றி ஏதொன்றும்



◻ கோபால்ட் சிகிச்சைக் கருவி ,கே ஸ்ரீ காமராஜ், ஸ்ரீமதி ஜோதி வேங்கடாசலம் ஆகியோருடன் டாக்டர் கிருஷ்ணமூர்த்தி.

◻ கோபால்ட் சிகிச்சை.

சரியாக அறிந்திராத போது யார் நன்கொடை வழங்குவார்கள்?

எனினும், முத்துலக்ஷ்மி ரெட்டி தமது லட்சியத்தை மறக்கவேயில்லை. தக்க தருணத்துக்குக் காத்திருந்தார். அதற்கிடையில் தம் மகன் கிருஷ்ணமூர்த்தியைப் புற்றுநோய் பற்றி விசேஷ அறிவு பெற்று வர அமெரிக்காவுக்கு அனுப்பத் தீர்மானித்தார். இதற்கெனத் தம் காரையும் வீட்டிலிருந்த இதர சில பொருள்களையும் விற்கவும் துணிந்தார்!

இந்திய மாதர் சங்கத்தின் தலைவி என்ற முறையில் அச்சங்கத்தின் ஆதரவுடன் புற்று நோய் நிவாரண நிதிக் குழு அமைத்துப் பணம் திரட்டத் தொடங்கினுர் டாக்டர் முத்துலக்ஷ்மி ரெட்டி. சுமார் ஒன்

றரை லட்சம் வரை சேர்ந்தது. மருத்துவ மனை அமைய நிலம் வாங்கக்கூடப் போதாதே இந்தத் தொகை! இச்சமயத்தில் முத்துலக்ஷ்மி ரெட்டியை மேல்சபை உறுப்பினராக நியமிக்க கவர்னர் ஸ்ரீ ஸ்ரீபிரகாசா விரும்புவதாகத் தெரிய வந்தது. டாக்டர் முத்துலக்ஷ்மி ரெட்டி சொன்னார்: ''அரசினர், புற்றுநோய் மருத்துவ மனைக்கென்று நிலம் ஒதுக்கினாலன்றி எனக்கு அளிக்கப்படும் இந்தக்கௌரவத்தை ஏற்கமாட்டேன்!'' இவ்வாறு கூற எத்தனை நெஞ்சுறுதியும், தன்னலமற்ற மனமும் வேண்டும்! அவர் பிடிவாதம் பலனளித்தது. நிலம் ஒதுக்கப்பட்டது. இலட்சியம் ஈடேறியது. புற்றுநோய் மருத்துவமனை உருவாயிற்று.

ஆனால் உண்மையில் மருத்துவமனையா அது? மாடியில்லாத ஒரே கட்டடம். ஆபரேஷன் தியேட்டர், வந்து போகும் நோயாளிகளைக் கவனிக்கும் இடம், எக்ஸ்ரே படம் எடுக்கும் அறை, எக்ஸ்ரே சிகிச்சை அளிக்கும் பகுதி, புற்றுநோய் உள்ளதா எனத் திசுக்களை ஆராயும் பிரிவு, தங்கியிருக்கும் நோயாளிகள் படுக்கும் அறை எல்லாம் அந்த ஒரே கட்டடத்துக்குள்ளேதான்!

அந்நாட்களில் டாக்டர் முத்துலக்ஷ்மி ரெட்டியின் வீட்டிலிருந்தே ஒரு சைக்கிள் பையன் நோயாளிகளுக்கு இலவசமாக வழங்க உணவு கொண்டு வருவான். சஸ்திர சிகித்சை செய்வதற்கான ஆயுதங்கள் கடன் வாங்கியவை. மைக்ராஸ்கோப்புகளோ டாக்டர் கிருஷ்ணமூர்த்தியின் சொந்த உடைமைகள். டாக்டர் சாந்தாவும், டாக்டர் கிருஷ்ணமூர்த்தியும் அந்த ஆரம்ப நாட்களில் இங்கே உழைப்புத் தானம் செய்தார்கள் என்பதை விட அதில் வள்ளல்களாக விளங்கினார்கள் என்றே கூறலாம். டாக்டர் சாந்தா டாக்டராக மட்டுமின்றி, நர்ஸாகவும், சஸ்திர சிகிச்சை அறையைச் சுத்தம் செய்பவராகவும் சஸ்திர சிகித்சைக்கான உபகரணங்களைக் கிருமிகளற்ற வகையில் தூய்மைப்படுத்துபவராகவும், நோயாளிக்கு ரத்தம் செலுத்துபவராகவும் விளங்கினார். இன்னும் பலப்பல அலுவல்களையும் கவனித்து வந்தார். இது தவிர இவர்கள் தங்கள் வாழ்க்கையை நடத்த வருவாயும் தேடிக் கொள்ள வேண்டியிருந்ததால் சில காலம் வரையில் முறை போட்டுக் கொண்டு வேறு ஆஸ்பத்திரிகளுக்குப் போய்ப் பணி புரிந்து சம்பாதித்து வந்தார்கள்!

புற்றுநோய் சிகித்சைக்குரிய இரு கருவிகளை முதன் முதலில் இந்த மருத்துவ மனைக்குக் கொடுத்து உதவியவர்கள் ஜி. இ. ஸி. ஸ்தாபனத்தினர். புற்றுநோய் இருக்கிறதா என்று ஆராய உள்ளுறுப்புக்களைப் படம் பிடிக்கும் கருவி ஒன்று. இது 'எக்ஸ்ரே' கருவி.

மற்றொரு கருவியும் எக்ஸ் கதிர்களைப் பயன்படுத்துவதுதான். புற்று நோய் உள்ள இடத்துக்கு மிக அதிக சக்தியுள்ள எக்ஸ் கதிர்களை அனுப்பும் ஆற்றல் வாய்ந்தது. அதிக சக்தியுள்ள எக்ஸ் கதிர்களை உடலின் ஓரிடத்தில் குவியச் செய்தால் அது அவ்விடத்திலுள்ள திசுக்களை அழித்துவிடும். அதிலும் புற்றுநோய் உள்ள வேகமாக விருத்தி அடையும் 'செல்'களை அழிப்பதில் இதற்கு அதிக ஆற்றல் உண்டு. இத்தகைய ஒரு கருவியைத்தான் ஜி. இ. ஸி. ஸ்தாபனம் அளித்தது.

பெருந்தன்மையோடு மிகக் குறைந்த விலைக்குத் தரப்பட்ட இந்தக் கருவிகளை நன்றியோடு பெற்றுக் கொண்டு மருத்துவ மனையைத் தொடங்கி விட்டார்கள். இந்த மருத்துவ மனை நிறுவப்படுவது எவ்வளவு அத்தியாவசியம் என்பது ஓரிரு மாதங்களிலேயே தெரிந்து விட்டது. பன்னிரண்டு கட்டில்களே நோயாளிகளுக்கென இருந்தன; ஆனால் நோயாளிகளின் எண்ணிக்கையோ ஐம்பதுக்கு உயர்ந்து விட்டது! மேலும் உயர்ந்து கொண்டிருந்தது. இதற்கிடையில் எக்ஸ் கதிர்களைப் புற்றுநோய் கண்ட இடத்தில் குவியச் செய்வதில் ஒரு புரட்சிகரமான மாறுதலை ஏற்படுத்தியிருந்தது விஞ்ஞான உலகு. கோபால்ட் என்ற மூலப் பொருளைப் பயன்படுத்தி மேற்படி சிகித்சையைச் செய்வது மகத்தான பலன் அளிக்கும் என்று கண்டது. இதற்குரிய விசேஷக் கருவிகளைக் கனடா அணுசக்தி நிறுவனம் தயாரித்திருந்தது. இவற்றை வாங்குவார் உண்டா என அறிய உலகப் பயணம் மேற்கொண்டார் கிரீன் என்ற நபர். அவர் சென்னைக்கு வந்தபோது இங்கே புற்றுநோய் மருத்துவமனை இருப்பதாக அறிந்து ஃபோன் செய்தார்.

டாக்டர் கிருஷ்ணமூர்த்திக்குத் தர்மசங்கடமாய்ப் போயிற்று. மேனாடுகளில் எப்படிப்பட்ட நவீன ஆஸ்பத்திரிகளைப் பார்த்திருப்பார்? அவர் இங்கே வருவதா? ஆனால் அவர் வரத்தான் செய்தார். அத்துடன் குறைந்த வசதிகளைக் கொண்டு நிறைவான பணி நடப்பதைப் பார்த்து மகிழ்ந்தார்.

ஆயினும் என்ன? பாங்கில் எட்டாயிரம் ரூபாயை வைத்துக் கொண்டு நாலு லட்சம் பெறுமானமுள்ள கருவிக்கு ஆசைப்படலாமா? டாக்டர் கிருஷ்ணமூர்த்தி அந்த ஆசைக்கு இடம் தரவில்லைதான். ஆனால் அதிசயத்திலும் அதிசயம்! அந்தக் கருவி இவர்களுக்குக் கிறிஸ்துமஸ் சமயத்தில் இலவசமாகவே வந்து சேர்ந்தது!

தென்கிழக்கு ஆசியாவிலேயே முதன் முதலாக இந்த நவீனக் கருவியைப் பெற்றது இந்த மருத்துவமனைதான்! அது இவர்களது செயலாற்றலுக்கும் தன்னலமற்ற பணிக்கும் பரிசாகக் கிடைத்த ஒன்று.

இது வரை அடையாறு மருத்துவமனை பற்றி அலட்சியமாக நினைத்தவர்கள் இப்போது நிமிர்ந்து உட்கார்ந்தார்கள்! மிக நவீனமான கோபால்ட் கருவியைப் பெற்று விட்டதே! ஆகவே, இந்த மருத்துவமனையை நடத்தும் பொறுப்பை அரசே ஏற்றுக் கொண்டு சென்னை பொது மருத்துவமனையுடன் இணைத்துவிட வேண்டும் என்றுகூட முயற்சி நடந்தது! நல்ல வேளையாக இதன் நிர்வாகிகள் அதற்கெல்லாம் இடம் தராமல் தங்கள் பணியைத் தொடர்ந்தார்கள்.

ஐரோப்பாவிலே நிறுவப்பட்ட முதல் கோபால்ட் கருவி கனடா பெருமகனாரான மக்கான்னெல் என்பவரால் பிரிட்டனுக்கு நன்கொடையாக வழங்கப்பட்ட ஒன்று என ஒரு மருத்துவ சஞ்சிகையில் படித்தார் கிருஷ்ணமூர்த்தி. நாமும் ஏன் மக்கான்னெல்லை அணுகக் கூடாது என நினைத்தார். 'கல்லை எறிந்து வைப்போம்; மாங்காய் விழுந்தால்



விட்டமின்கள் மற்றும்
தாதுப் பொருட்களுக்கான
'உணர முடியாப் பசி' உங்களுக்கு
சோர்வும் எரிச்சலும் ஊட்டுகிறது...

# வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக்

## மட்டுமே 12 இன்றியமையாத சத்துக்களை அளிக்கிறது அந்த 'உணர முடியாப் பசி'யைத் தீர்ப்பதற்கு






உங்கள் உடலில் விட்டமின்கள், தாதுக்கள் மற்றும் முக்கிய சத்துக்களுக்கான பசி நிரந்தரமாக இருக்கிறது என்பதை எந்த டாக்டரும் கூறுவார். இந்த 'உணர முடியாப் பசி'யின் விளைவு— சோர்வு, எரிச்சல், இருப்புக் கொள்ளாமை, பசியின்மை, ஜீரண சக்தி குறைவு.

எல்லா சத்துக்களும் அடங்கிய வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக் சாப்பிட்டு 'உணர முடியாப் பசி'யைப் போக்குங்கள். அதில் 12 முக்கிய சத்துக்கள் உள்ளன: வளர்ச்சிக்கும், வலிமைக்கும் விட்டமின்கள்; இரத்த விருத்திக்கு இரும்புச் சத்து; நல்ல பசியெடுக்க எல்லாப் பொருட்களும்; நரம்புகளுக்கு உரமூட்ட ஃபாஸ்ஃபேட்டுகள்.

சிந்தித்துப் பாருங்கள்; உங்களுக்கு அல்லது உங்கள் குடும்பத்தில் யாரேனும் ஒருவருக்கு வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக் தேவை இன்றே!

இரண்டு அளவுகளில் கிடைக்கிறது:
250 ml 470 ml.

ஒரு [illegible] தயாரிப்பு

WVT-G-T TM

விழுகிறது...' என்ற நோக்கில் அச்செல்வந்தருடன் தொடர்பு கொண்டார். ஒன்றுக்கு இரண்டாகவே மாங்காய்கள் விழுந்தன! 1961ல் ஒன்றும் 1964ல் ஒன்றுமாக இரண்டு கோபால்ட் சிகிச்சைக் கருவிகள் வந்து சேர்ந்தன!

இத்தனைக்கும் பல லட்சக்கணக்கில் வழங்கிய அந்தப் பெருமகனார் தமது பெயரை இந்த ஆஸ்பத்திரிக் கட்டடம் ஒன்றுக்குச் சூட்ட அனுமதி தர ரொம்பத் தயங்கினாராம்! பலமாக வற்புறுத்திச் சம்மதம் பெற வேண்டியிருந்ததாம்!

மிகச் சக்தி வாய்ந்த இந்தக் கருவி, ஐம்பது அங்குல கனமுள்ள சுவர்களும், காரீயக் கலப்பில்லாதவையான இரும்புக் கதவும் திறக்க முடியாத கனமான கண்ணாடி ஜன்னலும் உள்ள அறையில்தான் இயங்க வேண்டும். இல்லையேல் கதிர் வீச்சினால் அனைவரும் பாதிக்கப்படுவார்கள். இத்தகைய கோட்டை போன்ற அமைப்பு உருவாகவும் ஒரு தொழிலதிபரிடம் நன்கொடை கோரிப் பெற்றார் டாக்டர் கிருஷ்ணமூர்த்தி.

இவ்வாறு மிக நவீன உபகரணங்களுடன் இன்று இந்த மருத்துவமனை இயங்கிய போதிலும் இதன் உண்மைச் சிறப்பு அந்தக் கருவிகளில் மட்டுமில்லை. அதைச் சூழ்ந்துள்ள மனிதர்களின் ஆற்றலும் சேவா உணர்ச்சியும் இன்னும் சிறந்தவை. உயர் மட்டத்தில் உள்ளவர்கள் பிற ஆஸ்பத்திரிகளில் உள்ளோர் வாங்குவதைக் காட்டிலும் குறைந்த சம்பளம் பெறுகிறார்கள். ஒவ்வொருவரும் மூன்று அல்லது நான்கு நபர்களின் வேலைகளைச் செய்கிறார்கள். இதனால் மற்ற ஆஸ்பத்திரிகளில் ஒரு நோயாளிக்குச் சராசரியில் பதினைந்து ரூபாய் செலவாகிறது என்றால் இங்கு ஏழு ரூபாய்தான் செலவாகிறது. இந்தச் சிக்கனம் காரணமாக நோய் தீர்க்கும் பணியில் குறை ஏதாவது உண்டோ என்றால் புள்ளி விவரக் கணக்கு, 'இல்லை' என்று அடித்துச் சொல்கிறது. சராசரியில் ஐம்பது சதவீதம் நோயாளிகள் நன்கு குணமடைந்து இல்லம் திரும்புகின்றனர். புற்றுநோயைப் பொறுத்தவரையில் இது உயர்ந்த எண்ணிக்கையே. அதிலும் புகையிலை அடக்குவதால் வாயிலும் தொண்டையிலும் ஏற்படும் புற்றுநோயைக் குணப்படுத்துவதில் அறுபது சதவிகிதத்துக்கும் அதிகமாக வெற்றி கண்டிருக்கிறது இந்த மருத்துவமனை. இது உலக ரிகார்டு!

இன்னொரு முக்கியமான விஷயம்: புற்றுநோய் இன்று குணமாகி விட்டது என்றால் அதோடு விட்டுவிட முடியாது. அந்நபரை மூன்று மாதங்களுக்கு ஒரு முறை, ஒரு வேளை மீண்டும் நோய் முளை விடுகிறதா எனப் பரிசோதிக்க வேண்டும். இப்படிப் பல தடவை செய்த பிறகே அவர் முழுக் குணம் பெற்றதாகத் திருப்தி அடைய முடியும். இதற்காக இந்த ஆஸ்பத்திரியில் தொடக்கக் காலத்திலிருந்து வந்த அத்தனை நோயாளிகளுக்கும் 'ஃபைல்' வைத்திருக்கிறார்கள். குறிப்பிட்ட காலத்தில் ஒருவர் வரவில்லையானால், 'ஏன் வரவில்லை? உடம்பு எப்படி இருக்கிறது?' என்று விவரம் கேட்டு 'ரிப்ளை கார்டு' அனுப்புகிறார்கள்.



ஸ்விஸ் நாட்டு ஜெனிவா மாநிலத்தில் வேலையற்றோர் தொகை 'ஏழு பேராக' உயர்ந்து விட்டது! ஆகவே அரசு மிகவும் கவலை கொண்டு இவர்களுக்கு வேலை தேடித் தரும் முயற்சியில் மும்முரமாக ஈடுபட்டுள்ளது.

''நேஜ்''

⋄⋄⋄⋄⋄⋄⋄⋄⋄⋄⋄⋄⋄⋄⋄⋄⋄⋄⋄⋄⋄⋄⋄⋄⋄⋄⋄⋄⋄⋄⋄⋄

மூன்று மாதங்களுக்கு ஒரு முறை பல ஏழைகளால் வர முடிவதில்லை. ஆகவே, அவர்களுக்கு ரயில் கட்டணத்தில் சலுகை காட்ட வேண்டும் என்று போராடினார் டாக்டர் சாந்தா. இது இலேசில் நடக்கிற காரியமா? கடைசியில், ரயில்வே உயர் உத்தியோகஸ்தர் ஒருவருக்கே புற்றுநோய் கண்டு அவர் லண்டனுக்குப் போய்ச் சிகிச்சை செய்து கொள்ள, அவர்கள், ''மூன்று மாதங்களுக்கு ஒரு முறை லண்டனுக்குப் பரிசோதனைக்கு வாருங்கள்'' என்ற போது அவர் டாக்டர் சாந்தாவின் கோரிக்கை எவ்வளவு நியாயமானது என உணர்ந்து ஆவன செய்தார்!

இவ்வாறு நோயாளிகளின் நலனுக்காக இவர்கள் ஆஸ்பத்திரிக்கு உள்ளே மட்டுமின்றி அதற்கு வெளியேயும் போராடுகிறார்கள்.

சர்க்கார் ஊழியர் ஒருவர் இங்கு சிகிச்சை பெற்றுத் திரும்பிய போது அவர் முகம் சற்றுக் கோணலாகி விட்டிருந்தது. மற்றபடி அவர் பூரண ஆரோக்கியத்துடன் விளங்கினார். சர்க்கார் காரியாலயத்தில் அவரைத் திரும்ப வேலைக்கு எடுத்துக் கொள்ளமாட்டோம் என்று கூறி விட்டார்கள்! அடையாறு புற்றுநோய் மருத்துவமனை அவருக்காகப் போராடி அவர் வேலையைத் திரும்பப் பெற்றுக் கொடுத்தது. அந்நபர் தொடர்ந்து சர்க்கார் உத்தியோகம் பார்த்து இன்று ஓய்வு பெற்று இந்த மருத்துவமனைக்கே திரும்பி வந்துள்ளார் — சிகிச்சைக்காக அல்ல; தம்மால் ஆன உதவிகளைச் செய்ய!

இப்படி மனிதாபிமானம் ஒரு பக்கம் இம்மருத்துவ மனையின் சிறப்பைப் பேச, மற்றொரு பக்கம் ஆராய்ச்சிகள் தொடர்கின்றன. 1961 முதல் 1963 வரை டாக்டர் சாந்தா காஞ்சி, செங்கல்பட்டு, திருவள்ளூர், பொன்னேரி ஆகிய ஊர்களுக்கு அடிக்கடி போய் வந்து புற்றுநோய்க்குரிய அறிகுறிகள் உள்ள மக்களைப் பரிசோதித்தார். இதன் விளைவாக, புகையிலை போடுபவர்களில் பன்னிருவரில் ஒருவருக்கு வாய் அல்லது தொண்டையில் புற்றுநோய் வரும் என்றும், புகையிலை போடாதவர்களில் அறுநூறில் ஒருவருக்குத்தான் புற்றுநோய் வரும் என்றும் ஆராய்ச்சி பூர்வமான முடிவுக்கு வந்தார். (மேற்படி ஆராய்ச்சி சிகரெட் பழக்கத்துக்கு அடிமையானவர்களுக்கும் ஒரு படிப்பினையே.)

புற்றுநோயை ஆரம்ப கட்டத்தில் கண்டு பிடித்து விட்டால் குணப்படுத்துவது எளிது. ஆனால் பலருக்கு ஆரம்ப கட்டத்தில் தமக்குப்

புற்றுநோய் இருப்பதே தெரிவதில்லை. மேலும் பெண்களுக்குச் சுத்தமாக இருக்கக் கற்றுக் கொடுத்தாலே கருப் பையை யொட்டிய புற்றுநோய்கள் வராமல் தடுக்கலாம். இதற்கெல்லாம் பிரசாரம் தேவை. புற்றுநோயை ஆரம்ப கட்டத்திலேயே கண்டு பிடிக்க வேண்டுமானால், ''எனக்கு அப்படியெல்லாம் ஒன்றும் இல்லை'' என்று எண்ணிக் கொண்டிருப்பவர்களைக் கூடப் பரிசோதிக்க வேண்டியது அவசியம்.

இதையெல்லாம் மனதில் கொண்டுதான் காஞ்சீபுரத்தில் புற்றுநோய் கட்டுப்பாடு திட்டம் ஒன்று அமுல்படுத்த வேண்டும்; அதற்கு ஐ. நா.வின் ஓர் அங்கமான உலக சுகாதாரக் கழகம் (WHO) பணம் ஒதுக்க வேண்டும் என்று இம்மருத்துவமனை கேட்டுக் கொண்டது. உலக சுகாதாரக் கழகம் ஆழ்ந்த யோசனைக்குப் பிறகு இவர்கள் தீட்டியிருந்த திட்டம் அவசியமான ஒன்றுதான் என்று தீர்மானித்து நிதி ஒதுக்க முற்பட்டது. அவ்வளவுதான், உடனே, ''அந்தத் திட்டம் தில்லியில் நடக்கட்டுமே?'', ''பெங்களூரில் ஏன் நடக்கக் கூடாது?'', ''பாண்டிச்சேரியிலும் நடக்க வேண்டியதுதானே?'' என்றெல்லாம் குரல்கள் நாலாபக்கமிருந்தும் எழுந்தன! அருமையான சந்தர்ப்பம் கைநழுவிப் போய் விட்டிருக்கும், டாக்டர் சாந்தா அறிஞர் அண்ணாதுரையை நேரில் சந்திக்காமலிருந்திருந்தால். அண்ணா பிடிவாதமாக இருந்து காரியத்தைச் சாதித்தார். இன்று காஞ்சியிலும் சுற்று வட்டாரங்களிலும் பலரைப் பரிசோதித்துப் பார்த்து அவர்கள் உடலிலிருந்து நீக்கப்படும்திசுக்கள், சில திரவங்கள் முதலானவற்றை அடையாறு புற்றுநோய் மருத்துவமனைக்குத்தான் அனுப்புகிறார்கள், புற்றுநோய் உள்ளதா என ஆய்ந்தறிய.*

ஆழ் எக்ஸ்ரே சிகித்சையினால் சில ரகப் புற்று நோய்த் திசுக்கள் சுலபத்தில் அழிவதில்லை. அதற்காகக் குறிப்பிட்ட ரசாயனத் திரவத்தை முதலில் உடலில் புற்றுநோய் கண்ட இடத்தில் பரவுமாறு ஊசி மூலம் செலுத்தி விட்டுப் பிறகு எக்ஸ்ரே சிகித்சை அளிக்கலாம் என்று இம்மருத்துவமனையில் கண்டுபிடித்தார்கள். இது டோக்கியோவில் நடந்த உலக புற்றுநோய் மகாநாட்டில் பெரிதும் பாராட்டப்பட்டது.

ஆழ் எக்ஸ்ரே சிகித்சை அளிக்கையில் நலமாயிருக்கும் உடல் திசுக்கள் மீது கதிர்கள் படாமல், புற்றுநோய் கண்ட இடத்தில் மட்டுமே அதன் வீரியம் பாயுமாறு குறிப்பிட்ட ஒரு கோணத்தில் அதனைச் செலுத்த உதவும் உலோக அமைப்புக்களை இங்கு உருவாக்கியிருக்கிறார்கள். எக்ஸ்ரே கருவியில் இதனைப் பொருத்தி சிகித்சையைத் தொடரும்போது நலமாயுள்ள உடல் பாகங்கள் கதிர் வீச்சினால் பாதிக்கப்படுவதில்லை.

'' எதிர்காலம் ? அதைப் பற்றிச் சொல்லுங்கள் !'' என்றேன், டாக்டர் சாந்தாவிடம். கடந்த காலம், நிகழ்காலம் பற்றி உற்சாகமாகப் பேசி வந்த அவர், முன்னைவிடப் பன்மடங்கு அதிக உற்சாகத்துடன் தொடர்ந்தார் :

''கிண்டி ராஜபவன் அருகே விஸ்தாரமான இடம் இந்தப் புற்றுநோய் மருத்துவமனைக்கு அரசினரால் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இப்போது உள்ள இந்த இடம் இவ்வளவு முக்கியமான ஒரு நிறுவனத்துக்குச் சற்றும் ஏற்றதில்லை. ஆரம்பத்தில் நான் கூறியது போல் இது எங்கள் மீது திணிக்கப்பட்டது என்றே சொல்லலாம்.

''புதிய இடத்தில் கட்டடங்களும் ஆஸ்பத்திரிக்கான இதர பல வசதிகளும் அமைய அறுபது லட்சம் ரூபாய் தேவைப்படும் என்று கணக்கிடப்பட்டுள்ளது. இருபது லட்சம் ரூபாய் நன்கொடையாக வசூலித்தால் அரசினர் மீதியைத் தருவார்கள். தமிழக அரசு தனது பங்கைத் தருவதாய் வாக்களித்து விட்டது. மத்திய அரசும் பின்வாங்காது.''

'' பொதுமக்களிடமிருந்து இவ்வளவு பெரிய தொகையைத் திரட்ட முடியுமா?''

''எத்தனையோ ஏழைகளுக்கு இலவசமாய்ப் புனர்வாழ்வு தரும் இந்த மருத்துவமனை, அரசினரின் மான்யங்களை மட்டுமின்றி, பொதுமக்களின் நன்கொடையையும் நம்பித்தானே உருவாயிற்று; வளர்ந்தது; நடந்து வருகிறது? இவ்வளவு முக்கியமானதும் மிகச் சிறப்பாக நடக்கிறது என நிரூபிக்கப்பட்டதுமான பணிக்கு உதவப் பொதுமக்களும் செல்வந்தர்களும் தயங்க மாட்டார்கள்.'' டாக்டர் சாந்தாவின் குரலில் நம்பிக்கை தொனித்தது.

அந்த நம்பிக்கை வீண் போகக் கூடாது என்று பிரார்த்தித்தபடியே, ''கடைசியாக ஒரு கேள்வி. ஆஸ்பத்திரி அங்கே போய்விட்டால் இப்போது உள்ள இந்த இடம்....?'' என்றேன்.

''சொல்கிறேன். இப்போது புற்றுநோயைக் குணப்படுத்த முடியும் என்ற நிலையில் உள்ள நோயாளிகளை மட்டுமே நாங்கள் இங்கு ஏற்கிறோம். நோய் முற்றி இனி குணப்படுத்த முடியாது என்ற நிலையில் உள்ளவர்களைத் திருப்பி அனுப்பி விடுகிறோம். ஏனெனில், அவர்களை ஏற்றால் குணப்படுத்தக்கூடும் என்ற நிலையில் உள்ள நோயாளிகளுக்கு இடமில்லாது போகும்.

''ஆனால் நாங்கள் திருப்பி அனுப்பிவிடுகிற நோயாளிகளின் நிலை ரொம்ப ரொம்பப் பரிதாபகரமானது. நோய் முற்றி வேதனை தாங்காது துடிப்பார்கள். இவர்களில் பலர் வலியை உணராதிருக்க ஒரு தடவை மார்பின் ஊசி போட்டுக் கொள்ளக்கூடக் காசில்லாத பரம ஏழைகள். இத்தகையவர்களை இந்தக் கட்டடங்களில் இருக்கச் செய்து அவர்கள் நசுக்கப்பட்ட புழு பூச்சிகள் போல் துடித்துச் சாகாமல் மனிதர்களாக இருந்து சாவை அணைக்க உதவுவது எங்கள் நோக்கம். இதனால் வேறு ஒரு நல்ல பலனும் விளையும். புற்றுநோய்க்கான புதிய மருந்துகளைப் பரிசோதித்துப் பார்க்க இவர்களில் பலர் அனுமதி தரலாம்; அதன் மூலம் மருத்துவ உலகுக்கு உதவலாம்.''

எதிர்ப்பிலே கண்ட வெற்றி என்றோம் தொடக்கத்தில். மருத்துவ உலகு காணும் எதிர்ப்பு புற்றுநோயிடமிருந்தே கிளர்ந்தெழுகிறது. அதனை முழுமையாக வென்றுவிடுவதில் மருத்துவ உலகு முனைந்திருக்கிறது. இதற்கு அடையாறு புற்றுநோய் மருத்துவமனையும் துணை செய்கிறது.

— கி. ராஜேந்திரன்

* உலக சுகாதாரக் கழகம் காஞ்சியில் புற்றுநோய்க் கட்டுப்பாடு திட்டத்துக்கு உதவியதுடன் தற்போது அங்கு ஒரு புற்றுநோய் மருத்துவ மனை அமைக்கவும் உதவலாம் எனத் தெரிய வருகிறது.

# பொன்னியின் செல்வன்

அமரர் **கல்கி**

அத்தியாயம் அறுபத்துமூன்று

## பினாகபாணியின் வஞ்சம்

**பொ**ன்னியின் செல்வரும் குந்தவை தேவி முதலானோரும் பாதாளச் சிறைக்குச் சென்று பார்த்தபோது அங்கே அவர்கள் வந்தியத் தேவனைக் காணவில்லை. அவனுக்குப் பதிலாக வைத்தியர் மகன் பினாகபாணியைக் கண்டார்கள். பினாகபாணி சுவரில் இருந்த இரும்பு வளையங்களில் சேர்த்துக் கட்டப்பட்டிருந்தான். "ஐயையோ! கொலைகாரன் தப்பி ஓடிவிட்டான். பைத்தியக்காரன் தப்பி ஓடிவிட்டான்!" என்று கூச்சலிட்டுக் கொண்டுமிருந்தான். அவனைக் குந்தவை தேவிக்கும் வானதிக்கும் நன்கு நினைவிருந்தது. முதன் முதலில் வந்தியத் தேவனுக்குத் துணையாக அவனையும் கோடிக்கரைக்கு அவர்கள் அனுப்பினார்கள் அல்லவா? பினாகபாணியை விடுதலை செய்யப் பண்ணி விசாரித்த போது அவன் சற்று முன் அங்கு நடந்த நிகழ்ச்சிகளைச் சுருக்கமாகத் தெரியப்படுத்தினான். தப்பி ஓடிப்போனவர்களை விரைவாகத் தொடர்ந்து பிடிக்க வேண்டுமென்றும் ஆத்திரப்பட்டான்.

ஆனால், அவனுடைய வரவாற்றைக் கேட்டவர்கள் அது விஷயத்தில் அவ்வளவு ஆத்திரம் கொள்ளவில்லை. வந்தியத்தேவனுடைய சாமர்த்தியத்தைப் பற்றி மனத்துக்குள் அவர்கள் மெச்சிக் கொண்டதுடன், அச்சமயம் அவன் தப்பி ஓடிப் போனதே ஒரு விதத்தில் நல்லது என்று எண்ணிக் கொண்டார்கள். மணிமேகலை தனது எண்ணத்தை வெளிப்படையாகத் தெரிவிக்கத் தொடங்கியபோது, குந்தவை, அவளைத் தடுத்து, "தங்காய்! பேசாமலிரு! இது பெரிய இராஜாங்க விஷயம். பெண் பிள்ளைகளாகிய நமக்கு அதைப் பற்றி என்ன தெரியும்? உன் மனத்தில் இருப்பதை என்னிடம் தனியாகச் சொல்லு!" என்றாள்.

எல்லாரும் பாதாளச் சிறையின் வாசலில் வந்த போது அங்கே சேநாதிபதி பெரிய வேளாரும் வந்து சேர்ந்தார். சிறையில் ஏதோ தவறு நடந்துவிட்டது என்ற செய்தி அவர் காதுக்கு அதற்குள் எட்டியிருந்தது. நடந்தவற்றை அறிந்த போது சேநாதிபதியும் தப்பி ஓடியவர்களைப் பிடிப்பதில் அவ்வளவாகப் பரபரப்புக் காட்டவில்லை. உண்மையில் அவருடைய மனத்துக்குள்ளேயும் வந்தியத்தேவன் மீது சாட்டப்பட்டிருந்த குற்றத்தைப் பற்றிச் சிறிதும் நம்பிக்கை உண்டாகியிருக்கவில்லை. அருள்மொழி வர்மர், குந்தவை தேவி முதலியோர்



வந்தியத் தேவனிடம் கொண்டிருந்த அபிமானத்தையும் அறிந்திருந்தார். ஆகையால், கோபங் கொள்வதற்குப் பதிலாக வந்தியத்தேவனுடைய கெட்டிக்காரத்தனத்தைக் குறிப்பிட்டுச் சிரித்தார்.

''அந்த வாணர்குல வாலிபன் ரொம்பச் சாமர்த்தியசாலி! இலங்கை மாதோட்டச் சிறையிலிருந்தும் அவன் இப்படித்தான் ஒரு தடவை தந்திரமாகத் தப்பிச் சென்றான்!'' என்றார்.

வைத்தியர் மகன் குறுக்கிட்டு, ''ஐயா! தப்பி ஓடியவர்களைத் தேடிப் பிடிக்க ஏற்பாடு செய்ய வேண்டாமா?'' என்றான்.

''ஆ! அவர்கள் எங்கே தப்பிச் சென்றுவிடப் போகிறார்கள்? இந்தக் கோட்டைக்குள்ளேதானே இருக்க வேண்டும்? பார்த்துக் கொள்ளலாம்!'' என்றார் சேநாபதி பெரிய வேளார்.

பிநாகபாணி ஆத்திரத்துடன், ''இல்லை, இல்லை! அந்தக் கொலைகாரனுக்குச் சுரங்கப் பாதை தெரியும். அதன் வழியாக அவன் வெளியேறிப் போய் விடுவான்!'' என்று அலறினான்.



சேநாதிபதி இதனால் கோபம் அடைந்து, "முட்டாளே! நீ எனக்குப் புத்தி சொல்ல முன்வந்து விட்டாயா ? அவர்கள் தப்பிச் செல்வதற்கு நீதானே காரணம்? வேண்டுமென்றே அவர்களுடன் சேர்ந்து நீயே இந்தச் சூழ்ச்சி செய்தாயோ, என்னவோ? இவனைப் பிடித்து மறுபடியும் பாதாளச் சிறையிலே போடுங்கள்!" என்று பக்கத்தில் நின்ற வீரர்களைப் பார்த்துக் கூறினர்.

பினாகபாணி நடுநடுங்கிப் போனான். "இல்லே ஐயா! சத்தியமாக நான் அவர்களுடைய சூழ்ச்சியில் சேர்ந்தவன் அல்ல. முதன் மந்திரி அனுப்பி நான் வந்தேன் !" என்று முறையிட்டான்.

பொன்னியின் செல்வர் குறுக்கிட்டு, "ஆமாம்; இவன் முதன்மந்திரியின் ஆள் அல்லவா? தக்க காவலுடன் அவரிடம் அனுப்பிச் சேர்த்து விடலாம். முதன் மந்திரியே இவனுக்குத் தக்க தண்டனை கொடுக்கட்டும்!" என்றார்.

அவ்வாறே சேநாதிபதி வைத்தியர் மகனை முதன் மந்திரி அநிருத்தரிடம் கொண்டு போய் ஒப்புவித்துவிடும்படி தம்முடைய வீரர்கள் நால்வருக்குக் கட்டளை பிறப்பித்தார்.

முதன் மந்திரி அநிருத்தர் பினாகபாணியிடம் சிறையில் நடந்தவற்றைக் கேட்டு அறிந்தபோது அவரும் அவ்வளவாகப் பரபரப்புக் காட்டவில்லை.

அநிருத்தர் எந்த முக்கியமான காரியத்துக்கும் ஓர் ஆளை மட்டும் நம்பி அனுப்புவதில்லை. எங்கேயாவது ஒற்றனை அனுப்பினால், அவனைக் கவனித்துக் கொள்ளப் பின்னால் இன்னொருவனையும் அனுப்பி வைப்பது அவர் வழக்கம். அவ்வாறே இப்போதும் ஆழ்வார்க்கடியானை அனுப்பியிருந்தபடியால் அவர் கவலைப்படவில்லை. ஓடிப் போனவர்களை அவன் பிடித்துக் கொண்டு வருவான், அல்லது அவர்களைப் பற்றிய செய்தியாவது கொண்டு வருவான் என்று நம்பினர். ஓடிப் போனவர்கள் இருவரும் ஒரு வழியாக அகப்படாமலே ஓடிப் போய்விட்டால் பல தொல்லைகள் இரவகை ஏற்படும் என்ற எண்ணமும் அவர் மனத்தில் இருந்தது.

எனவே, பினாகபாணி பாதாளச் சிறையில் நடந்தவற்றைச் சொல்லிவிட்டு, "ஐயா! என்னுடன் நாலு ஆள்களை அனுப்பி வைத்தால் நானே அவர்களைத் திரும்பவும் கைப்பற்றி வருகிறேன்" என்று சொன்னபோது, அநிருத்தரும் அவன் பேரில் எரிந்து விழுந்தார்.

"முட்டாளே! காரியத்தை அடியோடு கெடுத்துவிட்டாய் ! அந்தப் பைத்தியக்காரனைப் பற்றி வெளியில் யாருக்குமே தெரியக்கூடாது என்று அல்லவா உன்னை அனுப்பினேன் ? இல்லாவிடில் நானே போய் அவனை அழைத்து வந்திருக்கமாட்டேனா? இப்போது அரண்மனையைச் சேர்ந்த பலருக்கும் அவனைப் பற்றித் தெரிந்துபோய் விட்டது. அது போதாது என்று நீ வேறு மறுபடியும் விளம்பரப்படுத்தப் பார்க்கிறாயா? போதும், உன் சேவை! நீ ஒற்றன் வேலைக்குச் சிறிதும் தகுதி அற்றவன் ! போ! இனி என் முகத்தில் விழிக்காதே! இன்று நடந்தவற்றை யாரிடமும் சொல்லாதே ! சொன்னதாகத் தெரிந்தால் உன்னைக் கழுவில் ஏற்றக் கட்டளையிடுவேன் !" என்றார் அநிருத்தர்.

பினாகபாணி தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு முதன்மந்திரி வீட்டிலிருந்து வெளியேறினான். அவனுடைய உள்ளத்தில் ஆசாபங்கத்தினால் ஏற்பட்ட குரோதம் கொழுந்துவிட்டு எரிந்தது. அந்தக் குரோதமெல்லாம் வந்தியத்தேவன் மீது திரும்பியது. அவனாலேதான் தனக்கு எடுத்த காரியத்தில் தோல்வியும் அபகீர்த்தியும் உண்டாயின. சேநாதிபதியும் முதன் மந்திரியும் தன்னைக் கடிந்துகொள்ளவும் நேர்ந்தது. இவர்கள் எல்லாரும் அலட்சியமாயிருந்தால் இருந்துவிட்டுப் போகட்டும். வந்தியத்தேவனைக் கண்டுபிடித்துப் பழி வாங்கும் கடமை தன்னுடையது. பைத்தியக்காரன் தப்பி ஓடிப் போனாலும் போகட்டும்; வந்தியத் தேவனை மட்டும் விடக்கூடாது. கோடிக்கரைக்குப் பிரயாணம் சென்ற நாளிலிருந்து தன்னுடைய விரோதி அவன். கடைசியாக இந்தப் பெரிய தீங்கைத் தனக்குச் செய்திருக்கிறான். அவனைக் கண்டுபிடித்துப் பழி வாங்கியே தீரவேண்டும்!....

இவ்வாறு பினாகபாணி தீர்மானித்துக் கொண்டு தஞ்சைக் கோட்டையைவிட்டு வெளியேறினான். வந்தியத் தேவன் கோட்டைக்குள் இருக்கமாட்டான் என்றும், இரகசியச் சுரங்கப் பாதை வழியாகப் போயிருப்பான் என்றும் அவன் உண்மையிலேயே நம்பினான். ஆனால் சுரங்கப் பாதை எங்கே இருக்கிறதென்றாவது, அதன் வெளி வாசல் எங்கே திறக்கிறதென்றாவது அவனுக்குத் தெரிந்திருக்கவில்லை. ஆயினும் கோட்டைச் சுவரில் எங்கேயோ ஓரிடத்தில் அந்த இரகசியச் சுரங்கப் பாதையின் வெளி வாசற்படி இருக்கத்தான் வேண்டும். சுவர் ஓரமாகப் போய்ச் சுற்றிப் பார்த்தால் ஒருவேளை கண்டுபிடித்தாலும் கண்டு பிடிக்கலாம். ஏன்? வந்தியத் தேவனும் பைத்தியக்காரனும் வெளியில்

வரும்போது கையும் மெய்யுமாக அவர்களைப் பிடித்தாலும் பிடித்துவிடலாம்...

இத்தகைய எண்ணத்தினால் பினாகபாணி தஞ்சைக் கோட்டையின் வெளிப்புறத்தில் மதிளை ஒட்டி ஓடிய வடவாற்றின் அக்கரை வழியாகப் போய்க்கொண்டிருந்தான். மதிள் சுவரைக் கவனமாக உற்றுப் பார்த்துக்கொண்டே போனான். கொடும்பாளூர் வீரர்கள் சிலர் கையில் தீவர்த்தியுடன் அவ்வப்போது மதிளைச் சுற்றிப் போய்க் கொண்டிருந்தார்கள். வைத்தியர் மகனிடம் இன்னமும் அவன் முதன் மந்திரியின் ஆள் என்பதற்கு அடையாளமான இலச்சினை இருந்தது. ஆகையால், வீரர்கள் எதிர்ப்பட்டால் அவன் அவர்களிடமிருந்து சமாளித்துக் கொண்டு செல்ல முடியும். ஆயினும், அவன் எடுத்த காரியம் அதனால் தாமதமாகும். ஆகையால், தீவர்த்தியுடன் காவல் வீரர்கள் எதிரே வந்தபோதெல்லாம் பாதை ஓரத்தில் மரங்கள் — புதர்களில் மறைந்து நின்று அவர்கள் அப்பால் போனதும் வெளி வந்தான். இப்படி அவன் ஒரு தடவை புதர்களில் மறைந்து கொண்டிருந்தபோது அவனுக்குச் சற்றுத் தூரத்தில் இன்னும் இருவர் ஒளிந்திருப்பதைப் பார்த்துத் திடுக்கிட்டான். அவர்களில் ஒருவன் கையில் வாள் இருந்தது. தீவர்த்தி வெளிச்சம் புதர்களின் வழியாக வந்து இரண்டொரு கிரணங்கள் அந்த வாளின்மீது பட்டபோது அது ஒளி வீசியது. ஆனால் ஒளிந்திருந்தவர்கள் யார் என்பது தெரியவில்லை.

காவலர்கள் அப்பால் போனதும் அந்த இரு மனிதர்களும் நதிக் கரைக்கு வந்து பினாகபாணி சென்ற திசைக்கு எதிர்ப்பக்கமாக நடந்து சென்றார்கள். பினாகபாணி தன் வழியே சிறிது தூரம் சென்றான். சட்டென்று அவன் மனத்தில் ஓர் ஐயம் உதித்தது. அவர்கள் இருவரும் தப்பி ஓடிய வந்தியத்தேவனும் பைத்தியக்காரனுந்தானோ என்னவோ? ஏன் இருக்கக் கூடாது? — கோட்டை வாசலை நோக்கி அவர்கள் சென்றபடியால், அவனுக்கு முதலில் அச்சந்தேகம் உதிக்கவில்லை. ஆனால் வந்தியத்தேவன் மிக்க தந்திரசாலி; துணிச்சலும் உள்ளவன். ஆகையால் என்ன உத்தேசத்துடன் போகிறானோ, என்னமோ ?....

எனவே பினாகபாணியும் திரும்பி அவர்களைச் சற்றுத் தூரத்தில் பின் தொடர்ந்து போனான். ஒருவனுடைய கையிலே வாள் இருந்தபடியால் ஓடிப் போய் அவர்கள் எதிரே நிற்கவும் அவன் விரும்பவில்லை. அநாவசியமாக அந்நியன் ஒருவனுடன் சண்டை போடும் சமயம் அதுவல்ல. அவர்கள் தப்பி ஓடியவர்கள் தான் என்று நிச்சயம் தெரிந்துகொண்ட பிறகுதான் எதுவும் செய்ய வேண்டும். அவனுடைய கையில் குட்டையான குத்தீட்டி ஒன்று இருக்கவே இருந்தது. அதைத் திடீரென்று உபயோகித்து அவனுடைய ஜன்ம விரோதியைத் தீர்த்துக் கட்டுவதே நல்லது. அதோ வடக்குக் கோட்டை வாசல் தெரிகிறது! அடடே! அங்கே என்ன இவ்வளவு கூட்டமும் ஆர்ப்பாட்டமும்? பல்லக்குகள், தீவர்த்திகள், முன்னும் பின்னும் அரண்மனைச் சேவகர்கள்! — யாரோ முக்கியமானவர்கள் வெளியில் போகிறார்களோ, திரும்பி வருகிறார்களோ தெரியவில்லை!

கடவுளே! இவர்கள் எங்கே? சட்டென்று மாயமாய் மறைந்துவிட்டார்களே? குறுக்கு வழியில் புகுந்துவிட்டார்கள் போலும்! எங்கே போயிருப்பார்கள்? இராஜபாட்டைக்குப் போய் விட்டார்களா, என்ன? தப்பி ஓடிய கைதிகள் அவ்வளவு தைரியமாக இராஜபாட்டைக்குச் சென்றிருக்க முடியுமா? இல்லாவிடில் எங்கே போயிருக்க முடியும்?... சேந்தன் அமுதனுடைய நந்தவனக் குடிசை அங்கே சமீபத்தில் இருப்பது பினாகபாணிக்கு நினைவு வந்தது. முன்னொரு முறை வந்தியத்தேவன் அங்கே ஒளிந்திருந்தான் என்பதும் அவனுக்குத் தெரிந்திருந்தது! ஆமாம்! ஆமாம்! அவர்கள் வந்தியத் தேவனும் பைத்தியக்காரனுந்தான். சேந்தன் அமுதன் வீட்டுக்குத்தான் போகிறார்கள். அங்கே இரவு மறைந்து தங்கியிருப்பதற்காகப் போகிறார்கள் போலும்! அல்லது அந்தத் தந்திரசாலியான வந்தியத்தேவன் வேறு என்ன உத்தேசம் வைத்திருக்கிறானோ, தெரியவில்லை.

சேந்தன் அமுதனுடைய நந்தவனம் இருந்த திசையை நோக்கிப் பினாகபாணி சென்றான். இருட்டில் வழி கண்டுபிடித்துச் செல்வது அவ்வளவு சுலபமாயில்லை. தட்டுத் தடுமாறி நந்தவனத்தை அடைந்தபோது அங்கே சிவிகைகளும் காவலர்களும் இருப்பதைக் கண்டு வியந்தான். என்ன செய்வதென்று தெரியாமல் அவன் தயங்கி நின்றபோது, சிவிகைகள் புறப்பட்டுவிட்டன. காவலர்களும் பின்தொடர்ந்து சென்றார்கள்.

பினாகபாணி அந்த நந்தவனத்தில் நாலாபுறமும் உற்றுப் பார்த்தான். ஒரு வேலியின் ஓரமாக இரண்டு குதிரைகளின் தலைகள் தெரிந்தன. வைத்தியர் மகனின் ஆர்வம் அதிகமாயிற்று. மெள்ள மெள்ள நடந்து குடிசையை

அணுகினான். ஒரு மரத்தினடியில் இருவர் நின்று பேசிக் கொண்டிருப்பதைக் கண்டான். அவர்கள் தான் தேடி வந்த ஆசாமிகளாகத்தான் இருக்க வேண்டும். குதிரைகள் இரண்டு ஆயத்தமாக நிற்கின்றனவே, அது எப்படி? அவர்கள் தப்பி ஓடுவதற்கு வேறு யாராவது, பெரிய இடத்தைச் சேர்ந்தவர்கள் இரகசியமாக உதவி புரிகிறார்களா, என்ன? அவர்களைத் தப்ப வைக்கும் சூழ்ச்சியில் இராஜ குடும்பத்தினரே சம்பந்தப்பட்டிருப்பார்களோ? அந்தப் பைத்தியக்காரன் தனக்கு ஏதோ இரகசியங்கள் தெரியும் என்பதாக அலறிக் கொண்டிருந்தானே, அந்த ரகசியங்கள் வெளிப்படக் கூடாது என்பதற்காக ஒருவேளை இதெல்லாம் நடைபெறுகிறதோ?....

மரத்தின் பின்னால் மறைந்து நின்று பேசுகிறவர்கள் யார் என்று உற்றுப் பார்த்தான். அவர்களில் ஒருவன் பைத்தியக்காரன்தான், சந்தேகமில்லை. அவனுடைய கம்மல் குரலை நன்றாக அடையாளம் கண்டுபிடிக்க முடிந்தது. அப்படியானால், இன்னொருவன் வந்தியத்தேவனாகத்தானே இருக்க வேண்டும்? ஆனால் அவன் மாதிரி தோன்றவில்லையே? இது என்ன அதிசயம்! இளவரசர் மதுராந்தகரைப்போல் அல்லவா தோன்றுகிறது? தலையிலே இளவரசக் கிரீடம்! தோளில் பீதாம்பரம்! கழுத்தில் முத்துமாலைகள்! கைகளிலும் ஆபரணங்கள்!.... மதுராந்தகருக்கும் இந்தப் பைத்தியக்காரனுக்குமிடையில் என்ன அந்தரங்கப் பேச்சு இருக்க முடியும்?

அது ஏதாவது இருந்துவிட்டுப் போகட்டும். தன்னுடைய ஜன்ம விரோதியான வந்தியத்தேவன் எங்கே? பக்கத்திலேதான் எங்கேயாவது இருக்க வேண்டும்; சந்தேகமில்லை. கையிலே வாளுடன் நடந்தவன் அவனேதான்! ஒருவேளை, வேலி ஓரத்தில் குதிரைகளைப் பார்த்தோமே? அவற்றில் ஒன்றின் மீது ஓடுவதற்கு ஆயத்தமாக உட்கார்ந்திருக்கிறானோ? பைத்தியக்காரன் வரவுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறானோ?... ஆகா! அப்படித்தான் இருக்க வேண்டும். அவர்கள் தப்பிச் செல்வதற்குக் காரணமானவர் மதுராந்தகர் தான் போலும்! மதுராந்தகருடைய தூண்டுதலினால்தான் வந்தியத்தேவன் கரிகாலரைக் கொன்றான் போலும்! இப்போது அவர்கள் தப்பித்துக் கொண்டு புறப்படுவதற்கு முன்னால், பைத்தியக்காரனிடம் மதுராந்தகர் ஏதோ செய்தி சொல்லி அனுப்புகிறார் போலும்! கடவுளே! இவையெல்லாம் மட்டும் உண்மையாக இருந்து, தன்னால் அவற்றை உண்மை என்று நிரூபிக்கவும் முடியுமானால்?....

இப்படியெல்லாம் பினாகபாணியின் கோணல் மூளை வேலை செய்தது. எல்லாவற்றுக்கும் குதிரைகளின் அருகில் போய்ப் பார்ப்பது நல்லது. அங்கே ஒருவேளை வந்தியத்தேவன் தனியாக இருந்தால், தன் கையிலிருந்த குத்தீட்டியினால் ஒரு கை பார்க்கலாம். பிற்பாடு, இந்தப் பைத்தியக்காரனைப் பிடித்துப் பயமுறுத்தி உண்மையை அறியலாம்.

மதுராந்தகரும் பைத்தியக்காரனும் பேசிக் கொண்டு நின்ற மரத்துக்கு நேர் எதிரே வேலிக்கு அப்பால் குதிரைகள் நின்றன. அவர்களைத் தாண்டிக் கொண்டு அங்கே போக முடியாது. வழியில் தாமரைக் குளம் வேறு இருந்தது. ஆகையால் குடிசைக்குப் பின்புறத்தை அடைந்து அங்கே வேலியைத் தாண்டிப் போய்க் குதிரைகள் நின்ற இடத்தைச் சேர்வதுதான் நல்லது.

பினாகபாணி அவ்வாறே சென்று குடிசையின் பின்புறத்தை அடைந்த போது, அவனுடைய காதில் சேந்தன் அமுதன் குரலும் பூங்குழலியின் குரலும் விழுந்தன. பூங்குழலியின் மீது கோடிக்கரையில் முதன் முதலாக அவளைச் சந்தித்த போதே பினாகபாணி மோகம் கொண்டிருந்தான். அவள் காரணமாகவே வந்தியத் தேவன் மீது அவனுடைய குரோதம் அதிகமாயிற்று. பிற்பாடு, அவன் மந்தாகினியைக் கைப்பற்றிக் கொண்டு வந்த போது, சேந்தன் அமுதனுக்கும் பூங்குழலிக்கும் ஏற்பட்டிருந்த நட்புரிமையைத் தெரிந்து கொண்டு மனம் புழுங்கினான். சேந்தன் அமுதன் மீதும் அவனுக்குக் குரோதம் உண்டாகியிருந்தது.

இப்போது சேந்தன் அமுதனும் பூங்குழலியும் மகிழ்ச்சி ததும்பிய மலர்ந்த முகங்களுடன் சல்லாபமாகப் பேசிக் கொண்டிருந்ததைப் பினாகபாணி குடிசையின் சிறு பலகணி வழியாகப் பார்த்தான். சேந்தன் அமுதன் மீது அவன் குரோதம் கொழுந்துவிட்டு எரிந்தது. இன்னும் சிறிது அருகில் சென்று அவர்களுடைய பேச்சைக் காது கொடுத்துக் கேட்டான். கலியாணம் செய்து கொண்டு கோடிக்கரை செல்லுவது பற்றிய அவர்கள் பேச்சு அவன் காதில் விழுந்தது. கலகலவென்று அவர்கள் இருவரும் சேர்ந்து சிரித்த ஒலி அவனுடைய குரோதக் கனலைப் பொங்கி எழச் செய்தது! சீச்சீ! கடைசியில் இந்த ஊமைப் பூக்காரியின் மகனா பூங்குழலியை அடையப் போகிறான்? அந்த-

எண்ணத்தைப் பினாகபாணியினால் சகிக்கவே முடியவில்லை. வந்தியத்தேவனையும் பைத்தியக்காரனையும் அவர்களைப் பிடிக்கும் உத்தேசத்தையும் அச்சமயம் அடியோடு மறந்து விட்டான். முதலில், இந்தத் தேவாரம் பாடும் சேந்தன் அமுதனை இந்த மண்ணுலகத்திலிருந்து அனுப்பிவிட வேண்டும். மற்றக் காரியங்களையெல்லாம் பிற்பாடு பார்த்துக் கொள்ளலாம்.....

இவ்விதம் முடிவுசெய்து பலகணிக்கு வெளியே சற்று ஓரமாக நின்று குத்திட்டியைச் சேந்தன் அமுதன் மேல் எறியக் குறி பார்த்தான். தற்செயலாக அந்த ஈட்டியையும் அதை ஏந்திய கையையும் மட்டும் பார்த்துவிட்ட பூங்குழலி 'வீல்' என்று கூச்சலிட்டாள். உடனே சேந்தன் அமுதனும் பலகணிப் பக்கம் திரும்பிப் பார்த்தான்! ஆகா! அவன் மார்பின் மேல் ஈட்டியை எறியச் சரியான சந்தர்ப்பம் !

பினாகபாணியின் கை ஈட்டியை எறிய ஓங்கியபோது பின்னால் தடதடவென்று காலடிச் சத்தம் கேட்டது. திரும்பிப் பார்த்த போது ஓர் ஆள் வெகு சமீபத்தில் வந்து விட்டான். இருளில் அவன் யார் என்று தெரியவில்லை. யாராயிருந்தாலும் சரி; தன்னுடைய உத்தேசத்தைத் தெரிந்து கொண்டு தன்னைப் பிடிப்பதற்கே ஓடி வருகிறான். சேந்தன் அமுதன் மீது எறிவதற்கு ஓங்கிய ஈட்டியை ஓடி வந்தவன் மீது செலுத்தினான். வந்தவன் கீழே விழுந்தான்.

அதே சமயத்தில் இரண்டு குதிரைகள் புறப்பட்ட சத்தம் கேட்டது. அவர்கள் வந்தியத்தேவனும் பைத்தியக்காரனுமாகவே இருக்க வேண்டும். அப்படியென்றால் இருட்டில் தன்னைத் தடுக்க வந்து தன் ஈட்டிக்கு இலக்கானது இளவரசர் மதுராந்தகராயிருக்கக்கூடும்!... இந்த எண்ணங்கள் மின்னல் வேகத்தில் பினாகபாணியின் உள்ளத்தில் தோன்றி அவனுக்குப் பயங்கரத்தை உண்டாக்கின.

குடிசைக்கு உள்ளேயிருந்து 'ஆகா!' 'ஐயோ!' என்ற குரல்கள் எழுந்தன. கதவைத் திறந்து கொண்டு வெளியில் யாரோ வரும் சத்தமும் கேட்டது.

பினாகபாணி ஓட்டம் பிடித்தான். அங்கிருந்து தப்பி ஓடுவதுதான் அப்போது முதன்மையாக அவன் செய்ய வேண்டிய காரியம். குதிரைகள்மீது ஓடியவர்களைத் தொடர்ந்து போய்ப் பிடிப்பது இரண்டாவது காரியம். தலைகால் தெரி





யாமல் பினாகபாணி விழுந்து அடித்து ஓடினான்.

* * *

சில கண நேரத்துக்கெல்லாம் பூங்குழலியும் சேந்தன் அமுதனும் விளக்குடன் வெளியில் வந்தார்கள். வந்தியத்தேவன் ஈட்டியால் குத்தப்பட்டு இரத்த வெள்ளத்தில் விழுந்து கிடப்பதைக் கண்டார்கள். அவர்கள் அடைந்த பயங்கரத்தையும் துயரத்தையும் சொல்லி முடியாது. மிக்க பரிவுடன் அவனை இருவரும் தூக்கிப் பிடித்துக் கொண்டு போய்க் குடிசைக்குள் சேர்த்தார்கள். அவன் இறந்து விடவில்லை என்று அறிந்து சிறிது ஆறுதல் பெற்றார்கள்.

வாணி அம்மை முன்னொரு தடவை கந்தமாறனுக்குச் செய்த பச்சிலை வைத்தியத்தை இன்று காயம் பட்ட வந்தியத் தேவனுக்குச் செய்யும்படி நேர்ந்தது.

## அத்தியாயம் அறுபத்துநான்கு

# "உண்மையைச் சொல்"

ஆழ்வார்க்கடியானை வந்தியத் தேவன் கட்டிப் போட்ட படகு ஆற்றோட்டத்தோடு சிறிது தூரம் மிதந்து சென்று கரையிலே ஒதுங்கியது. ஆற்று வெள்ளத்தில் தள்ளப்பட்ட வீரர்கள் இருவரும் தட்டுத் தடுமாறிக் கரை சேர்ந்து அந்தப் படகு ஒதுங்கியிருந்த இடத்துக்கு வந்து சேர்ந்தார்கள். ஆழ்வார்க்கடியானையும் மற்றொருவனையும் கட்டவிழ்த்துவிட்டார்கள். ஆனால் ஆழ்வார்க்கடியான் படகிலிருந்து இறங்கவில்லை. அவன் படகிலேயே கட்டுப் பட்ட மாதிரியே இருந்து கொண்டு மற்றவர்களை மறைவில் இருக்கும்படி சொன்னான்.

உண்மை என்னவென்றால், வந்தியத் தேவனும் கருத்திருமனும் தப்பித்துப் போய்விட வேண்டுமென்பதே ஆழ்வார்க்கடியானுடைய நோக்கமாயிருந்தது. முதன் மந்திரியின் விருப்பமும் அதுவே என்பதை அவன் தெரிந்து கொண்டிருந்தான். அவ்விருவரும் அச்சமயம் தஞ்சையில் இருப்பதால், பழைய சம்பவங்கள் பலவற்றைக் குறித்து ஆராய்ச்சி நடத்த வேண்டியதாக ஏற்படும். வந்தியத்தேவன் குற்றமற்றவன் என்பது பற்றி முதன்மந்திரிக்கும் ஆழ்வார்க்கடியானுக்கும் சந்தேகமே இல்லை. ஆயினும், அவன் மீது விசாரணை நடத்துவதனாலேயே பல சங்கடங்கள் ஏற்படும்; பலர் மன வருத்தம் அடையும்படி நேரிடும். அந்தப் பேச்சு மக்களின் காதுக்கு எட்டும்படி செய்வதே கேடாக முடியும். அருள்மொழி வர்மர் ஓர் அருமை நண்பனை இழக்கவும் சோழ ராஜ்யம் ஒரு சிறந்த வீர ராஜதந்திரியை இழக்கவும் நேரிடும். வந்தியத்தேவனைப் பற்றிக் குந்தவையின் மனோ நிலையையும், மணிமேகலையின் வெளிப்படையான ஆர்வத்தையும் முதன் மந்திரி அறிந்திருந்தார். எல்லாவற்றையும் உத்தேசித்துத்தான் வந்தியத் தேவன் தப்பி ஓடுவதற்கு உதவி செய்வதே அச்சமயம் உசிதமானது என்று தீர்மானித்தார்.

சேந்தன் அமுதனுடைய நந்தவனத்தில் குதிரைகளைக் கண்டுபிடித்த பிறகு வந்தியத் தேவனும் கருத்திருமனும் இந்த வடவாற்றின் கரையோடுதான் பிரயாணம் செய்வார்கள் என்று திருமலை நம்பி எதிர்பார்த்தான். கருத்திருமன் கூறியதுபோல், அந்த ஆற்றங் கரையோடு சென்றால், பாமணி நதியில் அது கலக்கும் இடம் வரையில் போகலாம். கோடிக்கரை வழியில் பாதி தூரம் சென்றுவிடும். ஆகவே இந்த வழியிலேதான் அவர்கள் வருவார்கள். போகும்போது அவர்களைத் தடுத்து நிறுத்தி வந்தியத்தேவனிடம் ஒரு செய்தி சொல்லி அனுப்ப வேண்டுமென்று ஆழ்வார்க்கடியான் எண்ணிக் கொண்டு அங்கு காத்திருந்தான்.

அவன் எதிர்பார்த்ததைக் காட்டிலும் கொஞ்சம் நேரம் அதிகமாக ஆகி விட்டது. "நாம் எண்ணியது தவறு; வேறு வழி போயிருக்க வேண்டும்; அல்லது ஏதேனும் எதிர்பாராதது நேர்ந்திருக்க வேண்டும்" என்று தீர்மானித்துத் திருமலை படகிலிருந்து கரையில் இறங்க யத்தனித்தபோது, தூரத்தில் குதிரைகளின் காலடிச் சத்தம் கேட்டது. எனவே, மறுபடியும் கட்டிப் போடப் பட்டவனைப் போல் கிடந்தான்.

குதிரைகள் நெருங்கி வந்ததும், "ஓகோ! யார் அங்கே? கொஞ்சம் நில்லுங்கள்! என்னைக் கட்டவிழ்த்து விட்டுப் போங்கள்!" என்று கூவினான்.

ஆயினும் குதிரைகள் நிற்காமலே சென்றன. முதலில் வந்த குதிரையின் மேல் இருந்தவன் கருத்திருமன்தான் என்பதைக் கண்டான். எனவே, இரண்

டாவது குதிரை நெருங்கிய போது, "வந்தியத்தேவா! வந்தியத்தேவா! கொஞ்சம் நில்லு!" என்று பெருங் கூச்சலிட்டான்.

இரண்டாவது குதிரையும் நிற்காமல் போயிற்று. அப்போது அதன் மேலிருந்தவனை ஆழ்வார்க்கடியான் பார்த்தான்; கரை காணாத அதிசயத்தில் ஆழ்ந்தான். "என் கண்களில் ஏதோ கோளாறு இருக்கிறது; என் அறிவு என்னை மோசம் செய்கிறது" என்றான்.

அவனைக் கடந்து அப்பால் சென்ற குதிரைகள் சிறிது தூரம் போன பிறகு நின்றன. ஒரு குதிரை மட்டும் திரும்பி வந்தது. அதன்மேலிருந்து கருத்திருமன் இறங்கினான். படகின் அருகில் வந்தான். "பாவம்! இன்னுமா கட்டுப்பட்டிருக்கிறாய்? எங்களுக்கு எவ்வளவோ பெரிய உதவி செய்தாய்! அதற்குப் பிரதியாக உன்னைக் கட்டவிழ்த்து விட்டாவது போகிறேன். ஆனால் உன் தந்திரம் எதையும் என்னிடம் காட்டாதே!" என்று சொல்லிக் கொண்டே அவன் குனிந்தபோது, திருமலை திடீரென்று கரையில் பாய்ந்து அவன் கழுத்தைப் பிடித்துக் கீழே தள்ளிவிட்டான்.

இதைச் சிறிதும் எதிர்பாராத கருத்திருமன் சிறிது நேரம் திகைத்துச் செயலிழந்து கிடந்தான்.

பிறகு, "ஐயோ! அப்பா! என்னை விட்டுவிடு! உனக்குப் புண்ணியம் உண்டு. நல்லது செய்ய வந்தவனுக்கு இப்படி நம்பிக்கைத் துரோகம் செய்யலாமா? அதோ உன் சிநேகிதன் வந்தியத்தேவன் காத்திருக்கிறான். ஆம்; அவன் உன்னைத் தன் அருமை நண்பன் என்று பாராட்டிக் கொண்டிருக்கிறான். இங்கு வந்து உன் காரியத்தைப் பார்த்தால் என்ன நினைப்பான்? நீ உயிரோடு தப்ப முடியாது! என்னை விட்டுவிடு, அப்பனே, விட்டுவிடு!" என்று பரிதாபமாகப் புலம்பினான்.

ஆழ்வார்க்கடியான், "அடே! எவ்வளவு துணிச்சலாகப் பொய் சொல்லுகிறாய்? அந்தக் குதிரையின் மேல் இருப்பவன் யார்? உண்மையைச் சொல்லு! சொன்னால் விட்டுவிடுகிறேன். இல்லாவிட்டால் அடுத்த நிமிஷம் உன் உயிர் உடம்பில் இராது!" என்றான்.

"ஆம், ஆம்! பொய்தான் சொன்னேன். உன்னை ஏமாற்ற முடியாதுதான். அந்தக் குதிரையின்மேல் இருப்பவன் வந்தியத்தேவன் அல்ல; இளவரசர் மதுராந்தகர். என்னை விட்டுவிடு! அவரிடம் உனக்கு வேண்டிய பரிசுகள் வாங்கித் தருவேன்!"

"சரி, சரி! பரிசுகள் இருக்கட்டும்! வந்தியத் தேவன் எங்கே?"

"அந்த நந்தவனக் குடிசையில் குதிரையிலிருந்து இறங்கிப் போனான். அப்புறம் அவனைக் காணவில்லை."

"நீங்கள் எங்கே போகிறீர்கள்?"

"வந்தியத்தேவனுடன் நான் போக உத்தேசித்த இடத்துக்குத்தான்."

"அதாவது இலங்கைத் தீவுக்கு."

"ஆமாம்!"

"மதுராந்தகர் எதற்காக இலங்கைக்கு வருகிறார்?"

"எனக்கு என்ன தெரியும்? அவரைக் கேள்! என்னுடன் வருகிறேன் என்று கிளம்பி வருகிறார்."

ஆழ்வார்க்கடியான் கருத்திருமனுடைய நெஞ்சை ஓர் அமுக்கு அமுக்கி, "உண்மையைச் சொல்! மதுராந்தகன் யாருடைய மகன்?" என்று கேட்டான்.

"இது என்ன கேள்வி? செம்பியன் மாதேவியின்.... இல்லை, இல்லை! நெஞ்சை அமுக்காதே! என் உயிர் போய்விடும்! ஊமை மந்தாகினியின் மகன்."

"மதுராந்தகனின் தகப்பன் யார்? உண்மையைச் சொல்! இல்லாவிட்டால், உயிரோடு தப்ப மாட்டாய்!"

கருத்திருமன் இதற்குப் பதில் மிக மெல்லிய குரலில் சொன்னான்.

"நல்லது; பிழைத்தாய்! கடைசியாக இன்னும் ஒன்று மட்டும் சொல்லிவிடு! சேந்தன் அமுதன் யாருடைய மகன்?"

"என்னை ஏன் கேட்கிறாய்? நீதான் முன்னமே தெரிந்து கொண்டாயே?"

"கண்டராதித்தர் — செம்பியன்மாதேவியின் மகன்தானே?"

"ஆமாம்; ஆனால் அவன் இன்று உயிரோடிருப்பதற்கு நான்தான் காரணம். செவிடும் ஊமையுமாகிய வாணி அந்தக் குழந்தை செத்துப் போய்விட்டதென்று எண்ணிப் புதைக்கப் பார்த்தாள். குழந்தை அழும் குரலைக் கேட்டு நான் காப்பாற்றினேன். அதற்காகவாவது என்னை இப்போது உயிரோடு விட்டுவிடு!"

"உண்மையில் அதற்காகவேதான் உன்னை இப்போது உயிரோடு விடுகிறேன்!" என்று சொல்லிவிட்டு ஆழ்வார்க்கடியான் எழுந்தான்.

கருத்திருமன் பாய்ந்து ஓடிக் குதிரை மீது ஏறிக் கொண்டான்.

இரண்டு குதிரைகளும் அந்த மழைக் கால இருட்டில் ஆற்றங் கரையோடு பாய்ந்து சென்றன. (தொடரும்)

கூடிச்செல்லுங்கள்
கோடி பெற...

# கோ-ஆப்டெக்ஸ்

விசேடத்-தள்ளுபடி




செப்டம்பர் 13முதல் அக்டோபர் 19தேதி 1971வரையில்

பண்டிகைப் பேரானந்த விழா இதுவே கோ-ஆப்டெக்ஸின் மணிவிழா. இந்தத் தீபாவளிக்கு நீங்களும் உங்கள் இல்லமும் ஒளியும் உவகையும் பெற்றிடச் செய்திடுங்கள். நாடெங்கும் உள்ள கோ-ஆப்டெக்ஸ் விற்பனைக் காட்சிக் கூடங்கள் அனைத்திலும் புத்தம் புதிய கைத்தறித் துணிவகைகள் வந்து குவிந்துள்ளன. மிகவும் சௌகரியமான கடைப்பகுதிகளில் பிரத்தியேகமாகத் தேர்ந்தெடுத்திட வகை வகையான ஜவுளிரகங்கள்; புகழ்பெற்ற காஞ்சீபுரம், ஆரணி மற்றும் கும்பகோணம் பட்டு வகைகள்.

எல்லா கோ—ஆப்டெக்ஸ் விற்பனை நிலையங்கள் மற்றும் ஏஜண்டுகளிடமும் கிடைக்கின்றன.

Criterion CO-2638TMB

# சேலைக் கலை

பட்டுத் துணி உடுத்துவதையும் ஆதரிக்க வேண்டியதுதான் என்று அண்ணல் காந்தியும் ஒப்புக்கொண்டார் பதினைந்து வருட யோசனைக்குப் பிறகு — அரை மனத்துடன்!

கிராம மக்களின் பொருளாதார நிலை மேம்பட வேண்டும் என்ற நோக்கில் சம்மதித்தார்.

அதனால்தான் இன்று சென்னை காதி கிராமோத்யோக் பவனில் பட்டுச் சேலைக் கண்காட்சி வைத்திருக்கிறார்கள். அனைத்தும் காதிப் பட்டு — முழுக்க முழுக்கக் கைவினைஞர்களின் திறனால் உருவானவை. எந்தப் புடவைக் கடையையுமே கண்காட்சியாகக் கருதக் கூடிய நம் பெண்கள் இந்தச் சேலைக் கண்காட்சியினுள் நுழைந்து விட்டால் மெய் மறப்பர் எனச் சொல்லவா வேண்டும்? மூன்று லட்ச ரூபாய்க்கு வியாபாரமாகும் இந்த விழாவில் என எதிர்பார்க்கிறார்கள்.

ஐம்பது ரூபாய் முதல் ஐந்நூறு ரூபாய் வரை சேலைகள் உண்டு. வங்கச் சேலைகளில் பிரிண்டுகள் அலாதியான பாணியில் அமைந்துள்ளன. வட மாநிலங்களிலிருந்து வரும் சேலைகளை வாங்கும்போது வெள்ளத்தால் பாதிக்கப்பட்டுள்ள மக்களுக்கு உதவும் புண்ணியமும் கிடைக்கிறது. மலிவாகவும் பெற முடிகிறது. அந்த மாநில அரசு பத்து சதவிகிதம் தள்ளுபடி செய்து தருகிறது; மத்திய அரசு ஐந்து சதம் அளிக்கிறது; காதி கிராமோத்யோக் பவனத்தினர் ஐந்து சதம் தங்கள் பங்குக்குத் தள்ளுபடி செய்து தருகின்றனர். ஆக, நூறு ரூபாய் புடவை எண்பது ரூபாய்.

புகழ்பெற்ற பலூசார் சேலை



கண்ணுடிப் புடவை நாம் அறிந்த ஒன்று. துணியில் ஆங்காங்கே முடிச்சுப் போட்டுச் சாயம் தோய்ப்பார்கள். முடிச்சுகளில் சாயம் இறங்காது. ஆகவே புள்ளி புள்ளியாகத் தெரியும். ஒரிஸ்ஸாவில் நூலிலேயே முடிச்சுப் போட்டுச் சாயம் ஏற்றிப் பிறகு நெய்கிறார்கள். பலவித டிசைன்கள் தறி போடும்போது உருவாகும் விதமாக நூலில் முடிச்சுப் போட்டுச் சாயம் ஏற்றுவதென்றால் அது எத்தனை நுணுக்கமான கணக்கு!

பலூரஸ் சேலைகளில் ஜரிகை வேலைப்பாடுகள் கண்ணைப் பறிக்கின்றன. அது சரி, கையைக் கடிக்குமே என்றால், தர்மாவரம் சேலையுடன் திருப்தி அடையலாம். அல்லது காஞ்சிபுரம் புடவை வாங்கிக் களிப்படையலாம்.

மேற்கு வங்கத்தில் பலூசார் என்று ஒரு கிராமம். மொகலாயர் காலத்தில் இங்கே சேலைக் கலை ஒன்று செழித்தது. பண்டைய வீரர்கள், பெரும் புகழ் பெற்ற பெண் மணிகள் ஆகியோரின் வாழ்க்கையைச் சித்திரிக்கும் விதமாகப் புடவையை நெய்வார்கள். சென்ற நூற்றாண்டில் கிட்டத்தட்ட அழிந்தே போய்விட்ட இந்தக் கலைக்கு சுபோ தாகூர் என்ற ஓவியர் ஆராய்ச்சிகள் பல புரிந்து புனர்வாழ்வு அளித்துள்ளார். ஒரு பலூசார் புடவையைத் தயாரிக்க மூன்று கலைஞர்கள் வேண்டும்; அவர்கள் ஒன்றுகூடி ஒரு மாதம் உழைக்க வேண்டும். ஜப்பான் எக்ஸ்போவில் அனைவரது கவனத்தையும் கவர்ந்து பரிசுகள் பலவும் பெற்றது இக்கலை.

“அந்த பாதிக் டிசைன் ரொம்ப அழகு!”



பாதிக் டிசைன்களுடன் கூடிய பட்டுப் புடவைகள் மாடர்ன் ஆர்ட் மன்னர்களுக்கு வருவாய் தேடிக் கொடுப்பதுடன் நவநாகரிகப் பெண்மணி விரும்பி ஏற்பதாகவும் உள்ளன. தாய்லந்து, இந்தோனேஷியா போன்ற நாடுகளிலிருந்து வங்கத்துக்கு வந்த இந்தக் கலையைத் தமிழர்களும் கற்றுக்கொண்டு விட்டனர். வங்கத்தை விட இங்கு மலிவாகத் தயாரிக்க முடிகிறது. சென்னையில் வாழும் வங்க மக்களே விரும்பி வாங்குகின்றனர். பாதிக் முறையும் தற்போது பழசாகப் போய் ஓவியர் பேனாவைக் கொண்டு நவீன டிசைன்கள் போடும் காலம் வந்து விட்டது. இவை ஒவ்வொன்றும் ஒரு ரகமாக இருப்பதால் நாம் கட்டிக் கொண்டுள்ள புடவை மாதிரியே பக்கத்து வீட்டு பங்கஜமும் வாங்கி விட்டாளே என்ற ஏக்கத்துக்கே இடமில்லை.

காதி கிராமோத்யோக் பவனில் நடக்கும் இந்தக் கண்காட்சியை எளிமை உணர்வுடன் ஆறும் கலை அழகுடன் பவனத்தினரே வெளி மனிதர் உதவியின்றி அமைத்துள்ளனர். தீபாவளிக்கு முந்தின நாள் இரவு வரை நீடிக்கிறது.

— குட்டிகிருஷ்ணன்


மூன்று மந்திரவாதிகள்
கதை: வாண்டுமாமா 2
சித்திரம்:
இந்தக் குட்டிகள் நம்முடன் வந்து ஒரு வாரம் தான் ஆகிறது. அதற்குள் என்ன வளர்ச்சி!
இவை சாதாரண மிருகங்களாகத் தோன்றவில்லை. அபூர்வ சக்தி வாய்ந்தவைகளாகத் தெரிகிறது.


நம் பிரயாணத்தில் எதிர்ப்படும் முதல் மாளிகை இதுதான்.
வாருங்கள், பிரயாணக் களைப்புத் தீர அங்கு சில நாள் தங்குவோம்.


அடேயப்பா! எத்தனை பெரிய இடம்?
தூண்களைத் தான் பார் எத்தனை அழகு?
நினைவு தெரிந்து நீங்கள் அரண்மனையையே பார்த்ததில்லை. அதுதான் இத்தனை வியப்பு.


அது சரி... இத்தனை பெரிய அரண்மனையில் யாரையுமே காணோமே?
இதுவும் பாழடைந்த மாதிரியும் இல்லை.


யாருமற்ற அரண்மனையைக் கண்டு அதிசயித்துக் கொண்டிருக்கும் போது ஒரு குரல்...
வாருங்கள்... வாருங்கள்! நடந்து வந்த களைப்புத் தீர இங்கு தங்கலாம். தாக சாந்தி செய்து கொள்ளலாம். உண்டு, உறங்கி, உற்சாகமாகப் பிரயாணத்தைத் தொடரலாம்...!


குரல் எங்கிருந்து வருகிறது? அழைப்பவர் எங்கிருக்கிறார் என்று தெரியவில்லையே.


இதோ இந்தப் பக்கம் பாருங்கள். உங்களை உபசரித்து அழைத்தது நான் தான்.


அட, இத்தனை அழகாகப் பேசியது நீ தானா?
ஆமாம். இந்த அரண்மனையின் எஜமானர் வெளியே போயிருக்கிறார். அதோ அந்த அறையில் உயர்ந்த பானம் இருக்கிறது. அதை அருந்திக் களைப் பாறுங்கள். அவர் வந்ததும் விருந்தளிப்பார்.


கிளி குறிப்பிட்ட அந்த அறைக்குள் இவர்கள் போகுமுன் இவர்களை முந்திக் கொண்டு நுழைந்த நரி...
நரி தன் வாலால் கோப்பைகளை உருட்டி விடுகிறதே...
நாம் அதைக் குடிக்கக் கூடாது என்பதைச் சூசகமாகத் தெரிவிக்கிறதோ?


தரையில் சிந்திய பானம் நுரைத்துப் பொங்குவானேன்? இதில் ஏதோ ஆபத்திருக்க வேண்டும்.
இதை நம் தோழர்களின் முன்னால் வைப்போம். அவைகளின் தீர்ப்பை ஏற்போம்.


நம் தோழர்கள் இதை ஏற்கவில்லை. இதில் விஷமிடப்பட்டிருக்க வேண்டும்.
நாம் இதைப் பருகி மயங்கி விட்டதாகப் பாசாங்கு செய்வோம். என்ன நடக்கிறதென்று பார்ப்போம்.


இவர்களைப் பார்த்தால் வியாபாரிகளாகத் தெரியவில்லை. வழிப்போக்கர்கள். அதிலும் பரதேசிப் பயல்கள். நல்ல ஆடையாபரணங்கள் கூட இல்லை. கொழுத்த வேட்டையை எதிர் பார்த்தேன். பெருத்த ஏமாற்றம்.


இந்தப் பயல்களைத் தூக்கி வெளியில் எறிய வேண்டும்.
அயோக்கியனே, அது அத்தனை சுலபமல்ல தெரிந்து கொள்.
கொள்ளையடித்து வாழும் கொடியவனே, உனக்குச் சரியான பாடம் கற்பிப்போம்.


இளவரசர்களின் வாளும் வேலும் முஷ்டியும் அந்தக் கயவனைக் கதி கலங்க அடிக்கின்றன.


உன்னை ஒரே வீச்சில் யமனுலகுக்கு அனுப்பி விட என்னால் முடியும்.
ஆனால் கொல்லுவது எங்கள் கொள்கையல்ல. கொடியவனே! நீ எத்தனையோ பேர்களை ஏமாற்றி வருத்தி இருப்பாய்.
அதற்குத் தக்க தண்டனையாக நீ கொஞ்சம் கொஞ்சமாகச் சாக வேண்டும்.


திருடனை என்ன செய்யலாமென்று யோசிக்கும் வேளையில் தற்செயலாக ஒரு நிலவறை கண்ணில் பட...
இந்தப் பாதாளச் சிறையிலே நீ பத்திரமாகக் கிட. உன்னைக் கொல்லும் பணியை அங்குள்ள விஷ ஜந்துக்கள் ஏற்றுக் கொள்ளும்.


கொள்ளைக்காரனுக்கு கிளியும் உடந்தை இல்லையா? இங்கு வருபவர்களை எவ்வளவு அழகாக வரவேற்கிறாய்?
சொல்லிக் கொடுத்தபடி சொல்லுவதற்காகத்தானே என்னை வளர்த்து வைத்திருக்கிறான் அந்தப் பாவி. என் 'குற்றம்' ஒன்றுமில்லை.


பேசத் தெரிந்த கிளியே, நினைத்துப் பார்! இங்கு பேசும் பணி இனி உனக்கில்லை.
உங்களை நான் மறக்க மாட்டேன். என் உதவி தேவைப்படும் போது என்னை நினையுங்கள். எங்கிருந்தாலும் நான் அங்கு வருவேன்.
தொடரும்

# நவாப் நாற்காலி

நாடகம் பார்க்க வேண்டுமானால் நாற்காலி அவசியம். ஆனால் நாற்காலியே நாடகமாயிருந்தால் அதற்கு என்னவெல்லாம் அவசியம் என்பதை ஸ்டேஜ் ஃப்ரண்ட்ஸ் குழுவினரின் ''நவாப் நாற்காலி''யைப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம். ஏனென்றால் ஒரு நாற்காலியை வைத்துக் கொண்டுதான் ஒரு சுவையான நாடகத்தைப் புனைந்திருக்கிறார்கள். ஆரம்பம் முதல் கடைசி வரையில் நாற்காலிதான் இந்நாடகத்தில் முக்கிய பாத்திரம் — அதாவது கதாநாயகன்! நாற்காலியைச் சுற்றித்தான் மற்றப் பாத்திரங்கள் வளைய வருகிறார்கள்.

அனுபவம் முதிர்ந்த அரும் பெரும் நடிகர் எஸ். வி. சகஸ்ரநாமம் ''நவாப் நாற்காலி''யில் இரண்டு பாகங்கள் ஏற்று நடிக்கிறார். ஒன்று, பத்துக் குழந்தைகளுக்குத் தகப்பனான தாண்டவன், இன்னொன்று மலையாள மாந்திரீகர் நம்பூதிரி. நம்பூதிரிக்கு நவாப் நாற்காலியில் அமரும் பாக்கியம் கிடைக்கிறது. அதிலிருந்து அந்த நாற்காலியின் மதிப்பே உயர்ந்து விடுகிறது. இத்தனைக்கும் அந்த நாற்காலி தாண்டவன் மனைவியால் ஏலக் கடைக்கு விற்கப்பட்டு, பிறகு அங்கிருந்து அப்பள வியாபாரி அய்யாசாமியின் வீட்டுக்கு வந்து சேருகிறது. அந்த நாற்காலிக்குள் இரண்டு லட்ச ரூபாய் நோட்டுக்கள் வைத்துத் தைக்கப்பட்டிருக்கும் உண்மை தாண்டவனுக்குத் தெரியுமாதலால், அதைக் கண்காணிக்க அந்த வீட்டுக்கே குடும்பத்துடன் வந்து சேருகிறான். அந்த இரண்டு லட்ச ரூபாய் நாற்காலிக்குள் எப்படி வந்து சேர்ந்தது என்பதுதான் கதை.

நாடகத்தைத் திறமையாகப் புனைந்த கோமல் சுவாமிநாதன் உரையாடல்களை ஒரே ஹாஸ்யமாகத் தீட்டியிருக்கிறார். சிரிக்கக்கூடாதென்று உறுதியுடன் இருக்கும் 'சிடுமூஞ்சி'க்குக் கூடக் 'குபுக்'கென்று தானே சிரிப்பு வந்துவிடும்!

சகஸ்ரநாமம் தாண்டவன் பாகத்தை மிகவும் அநாயாசமாக ஏற்று மிக இயல்பாக நடிக்கிறார். பண்பட்ட அவர் நடிப்பில் காணும் நிதானம் நம்மை அயர வைக்கிறது. நம்பூதிரியாக வரும்போது ஆசாமி அடியோடு மாறிவிடுகிறார். அவர் கை விசிறியும், குடுகுடு நடையும்கூட மிக நன்றாக நடிக்கின்றன.

தாண்டவனின் மனைவியாக வரும் சாந்திமதியின் நடிப்பில் மேடை அனுபவம் பளிச்சிடுகிறது. மிகவும் இயற்கையான நடிப்பு.

ரூபாய் இரண்டு லட்சத்தை 'அபேஸ்' செய்து விட்டுப் பைத்தியம் பிடித்தவர் மாதிரி நடிக்கும் ஏ. கே. வீராசாமி சபாஷ் வாங்கி விடுகிறார். அப்பள வியாபாரியாக நடிக்கும் டி. எம். சாமிக்கண்ணுவின் நடிப்பு 'ஏ-ஒன்!' அவர் மேடையில் தோன்றும்போதெல்லாம் ஒரே கலகலப்புத்தான்.

காஞ்சனா ஒரு துப்பறியும் நிபுணி. அதற்கு வேண்டிய சாகஸமும், சாமர்த்தியமும் உள்ள சூர்யப்ரபா அந்தப் பாத்திரத்தை ஏற்று மேடைக்கே ஒளி உண்டாக்கிறார். ரவியும், காஞ்சனாவும் கொஞ்சம் கொஞ்சமாகக் காதலிக்க ஆரம்பித்த 'டெக்னிக்' மிகவும் பிரமாதம்.

நர்ஸ் கிறிஸ்டி ஒரு நல்ல பாத்திரம். சித்ரா அந்தப் பாத்திரத்தை ஏற்று ஒரு புதுத் தமிழில் பேசிச் சுவையூட்டினார்.

சுப்பு ஒரு சுவையான பாத்திரம். தத்துவார்த்தமான வசனம் பேசியே ரசிகர்களின் கையொலியைப் பெற்றார், அந்தப் பாகத்தில் நடித்த டி. ஜயராமன்.

நாடகத்தின் ஸஸ்பென்ஸ் தெரியாதபடி, மிகவும் சுவாரசியமாகக் காட்சிகளை அமைத்துக் கடைசி வரையில் சுவை குன்றாமல் செய்திருப்பது மிகவும் பாராட்டுக்குரியது. மூலக் கதை ரொம்ப 'ஸிம்பிள்'. ஆனால் அதை நாடகமாக்க எடுத்திருக்கும் அரிய முயற்சிகள், உரையாடல்களில் காணப்படும் நகாசு வேலைகள் எல்லாம் 'நவாப் நாற்காலி'யை ஒரு சிறந்த நாடகமாகச் செய்து விட்டன.

இந்நாடகத்தில் முக்கியமாகப் பாராட்ட வேண்டிய உத்தி — தாண்டவனின் பத்துக் குழந்தைகளையும் மேடையில் காட்டாமல், 'டமால்', 'கிரீச்', 'கிர்ர், கிர்ர்' என்ற ஒலி வகைகளின் மூலமே அந்தக் கிஷ்கிந்தை காண்டத்தின் சேஷ்டைகளை மறைமுகமாகக் காட்டி மனத்தில் பதிய வைத்திருப்பதுதான்.

— காந்தன்



நவாப் நாற்காலியில் மலையாள மாந்திரீகர் (எஸ். வி. சகஸ்ரநாமம்) அமர்ந்திருக்கிறார். அவருக்கு இருபுறமும் அப்பள வியாபாரி அய்யாசாமி தம்பதி. □

# சென்ட்ரல்

## பி.வி.ஆர்

### அத்தியாயம் 10

ஆப்பிள் ஒன்று - பைசா 84
ஆப்பிள் ஆறு - ரூபாய் 5
சாத்துக்குடி டஜன் - ரூபாய் 3
ஸப்போட்டா டஜன் - ரூபாய் 1-50
வாழைப் பழம் டஜன் - ரூபாய் 1-25
- சென்ட்ரல் ஸ்டேஷன் பழ வண்டியில் விலைப் பட்டியல்



அன்று அடையாற்றில் ஜம்புநாதன் பார்த்து வைத்த முதல் பெண்ணைப் பார்த்துவிட்டுக் கேதாரம் அவருடன் சென்ட்ரலுக்குத் திரும்பினான். அப்போது மணி நான்கு.

''என்னடா, சொல்லறே?'' என்று ஆரம்பித்தார் மாமா, அவர்களைக் கொண்டு வந்து விட்ட கார் திரும்பியதும்.

''ஒண்ணும் சொல்லவில்லே.''

''பிடிச்சிருக்கா ?''

''லேடஸ்டு அம்பாஸடர், மார்க் டு. கடற்கரைக் காற்று சுகமாக இருந்தது.''

''ஏண்டா, காரைக் கலியாணம் பண்ணிக் கொள்ளப் போகிறாய் என்றுடா கேட்டேன்? பெண் எப்படி?''

'' இரட்டை நாடி. இடுப்புச் சதை வழியறது. பவுடரை அப்பிண்டு இருக்கா.... உருண்டை மூஞ்சி. கழுத்தைத் தேடிப் பார்த்தேன். கிடைக்கலே. தலை 'பாப்' நன்றாயிருந்தது.''

''அவனுக்கு என்னடா குறைச்சல்?''

''நான் குறைவா எதையும் சொல்லலே... பார்த்ததைச் சொன்னேன்.''

'' அவருடைய தொழிற்சாலையிலே வருஷாந்திர வருமானம் எவ்வளவு தெரியுமா ?''

''தெரியாது.''

''ஒன்றரைக் கோடி ரூபாய். நிகர லாபம் ஆறு லட்சம் ரூபாயாம். அதிலே பாவம், நாலேகால் லட்சம் வரி கட்டினாராம்.''

''கட்டின வரியே நாலேகால்னா கட்டாத வரியின் வரும்படி நிறைய இருக்குமே ?''

''டேய், என்னடா சம்பந்தமில்லாமல் பேசிண்டே போகிறே? எனக்கு இந்த வரன் பிடிச்சிருக்கு... மாப்பிள்ளையானால் உன்னை வொர்க்ஸ் மானேஜராகப் போட்டுண்டு, மூவாயிரம் சம்பளத்தையும் கொடுத்து, வீட்டோடு வைச்சுண்டுடலாம்னு ஆசைப்படறார், அவர்..... ஐம்பத்தெட்டு வயசு வரை நீ என்னதான் ரயில்வேயிலே உழைச்சாலும் என்னடா, கிடைச்சுடப் போறது? இன்னிக்கெல்லாம் இருந்தால் இரண்டாயிரத்து இருநூற்றைம்பது ரூபாயிலே ரிடையராவாய் !''

''மாமா, மாமா! நான் பிறந்த வருஷம் நாற்பத்தி ஒண்ணு. நான் 1999ம் வருஷம்தான் கணக்குப்படி ரிடையராவேன். ஆனால் நீங்க சொன்ன இரண்டாயிரத்து இருநூற்று சொச்சத்திலே இல்லே !''

'' நிறுத்துடா... பெரிய பங்களா... மூணு ஏர்கண்டிஷன் அறைகள். பாதிச்

சொத்து பெண்ணுக்கு: கசக்கிற தாடா?''

''கசக்கலேயே? பீடா கசக்கலே....''

''சொல்லுடா, கண்ணு!''

''அவசரப்பட்டுண்டு எதையும் முடிவு பண்ணக் கூடாது. புதன் ஒரு பெண், வெள்ளி ஒரு பெண். அங்கேயும் டிபன் காப்பி சாப்பிடலாம்.''

'' வேண்டாம்டா..... வேண்டாம். அன்னிக்கு என்னமோ அப்படிச் சொன்னேன்..... வேண்டாம்... கிராம்ப்டன் என்ஜினீயருக்கு மூணு பெண்ணும் மூணு பிள்ளேயும். எல்லாம் மெடிகல் என்ஜினீயரிங் என்று படிக்கிறது. மூத்த பெண்ணுக்கு இருக்கிறதையெல்லாம் செலவு செய்ய முடியுமா? இந்த வரன் ஓரே பெண். கோடீசுவரனின் பெண்.''

'' ஓய்வுபெற்ற பிரதம காரியதரிசியின் பெண்ணே வெள்ளிக்கிழமை பார்க்கணும்.''

''அதுவும் வேண்டாம். வீட்டிலே அவரைச் சுத்தி மூணு குடும்பங்கள் இருக்குடா. அண்ணு ரிடையர்ட் வாத்தியார். தம்பி ரெவின்யூ இலாகா கிளார்க். இது போருதுன்னு அப்பா அம்மா தொண்ணூறும் எண்பதுமா வேறு கிழடா இருக்கு.... வெள்ளிக்கிழமை நாம் பெண் பார்க்கவே போக வேண்டாம்..... இதை முடிச்சுடுவோம். நீ சம்மதத்தைச் சொன்னுல் இன்னிக்கு ராத்திரியே பம்பாய் போயிடலாம்.''

''சரி, சொல்றேன். சொல்லிவிட்டு இன்னிக்கே புறப்பட்டும் போயிடறேன்.... ஆனால் அதுக்கு முன்னடி நான் ஒரு கேள்வி கேட்பேன்... அதுக்குப் பதில் சொல்வீர்களா?... உண்மையான பதிலாக இருக்கணும்.''

''சொல்றேன், சொல்றேன்! என் தலை எழுந்து. உன்னை வளர்த்துப் படிக்க வைச்சு ஆளாக்கினேன். இன்னிக்கு நீ உச்சாணிக் கொம்பில் உட்கார்ந்து என்னை ஆட்டி வைக்கிருய். கேளு, சொல்றேன்.''

''வரதட்சிணை எவ்வளவு கேட்டிருக்கிறீர்கள்....?''

''முப்பதாயிரம். ஒரு கார்.''

''ரொம்ப நல்லது. அப்புறம்...அப்புறம்....? உங்க முதியோர் ஆசிரமத்துக்கு ஏதாவது நன்கொடை கேட்டிருக்கிறீர்களா?''

''டேய்! அது என் சொந்த விஷயம். இந்த விவகாரங்களில் தலையிடாதே!''

''அப்போ சரி.''

கேதாரம் எழுந்தான்.

'' என்னடா, எழுந்திருக்கிறே?''

''பேச்சு முறிந்தது. என் கலியாணமும் என் சொந்த விஷயம்தான்.''

'' டேய்!''

''என் கேள்விக்குப் பதில் தேவை!''

'' இருடா, சொல்லித் தொலைக்கிறேன். குத்தாலத்திலே அவர் பேரிலே, 'ஆதிசேஷன் ஹால்'னு ஒரு மண்டபம் கட்டறேன்னேன். இந்த வருஷத்து லாபத்திலே கால்வாசியை நன்கொடையாகத் தர்றேன்னுர். ஆனல் ஒரு நிபந்தனை....''

''நான் அவனை... பெயரென்ன....? உம், ஆமாம்.... அபிதம்... அவளைக்



# புதிய லேவெண்டர் அற்புதம்

ஒய்யாரம்.
நீங்காத
நறுமணம்.

## லக்மே லேவெண்டர் ப்யூடி டால்க்




லக்மே லேவெண்டர் ப்யூடி டால்க் கன்னி புதத்தின் நறுமணம். அதைத் தூவிக் கொண்டால், நறுமணப் பொய்கையில் நீராடுவது போன்றிருக்கும்! அத்தனை மணம் கமழும் மணம் கமழும்! அதிமென்மையானது; அதி மென்மையானது; புதுமலர்ச்சி பூப்பது. ஒவ்வொரு நாளும் லக்மே லேவெண்டர் ப்யூடி டால்க் தூவி, இன்பத்தில் திளைப்பீர். அந்த அற்புதமான அனுபவம் பெறுவீர்... இன்றும்... என்றும்!



லக்மே டால்க் ஐந்து வகை நறுமணங்களில் உங்களை அடைகிறது: லேவெண்டர், வெட்டிவேர், கிர்வான், சந்தனம் மற்றும் ஃப்ளோரல் மின்ட்.

ASP/L-82

கலியாணம் செய்துகொள்ள வேண்டு மாக்கும்.....''

''நிபந்தனை அது இல்லேடா... உதவி ஜனாதிபதியோ, காபினெட் மந்திரியோ வந்து திறந்து வைக்க வேணுமாம்.... யாராவது ஒரு பத்திரிகைக்காரன் மலர் கொண்டு வர வேண்டுமாம்... ஏதோ அசட்டுத் தைரியத்தில், 'எல்லாம் நான் பார்த்துக்கொள்கிறேன். ரயில்வே மந்திரி ஹனுமந்தையா இருக்கார். இது மாதிரி நல்ல காரியங்கள் என்றால் வேறு யாரையும் வரவிட மாட்டார்'ன்னு அவரிடம் சொல்லி விட்டான்.... நீ என்ன சொல்லறே ?''

''பணம் எப்போ வரும் ?''

''இந்த மார்ச்சு முடிஞ்சா லாபக் கணக்கு தெரியும்.''

''அப்போ ஏப்ரலில் கலியாணமா?''

''ஆமாம்.''

''பணம் வந்தப்புறம்தான்.''

''ஆமாம்.... ஆமாம்....''

'' எனக்கு அதுக்கு முன்னாலேயே கல்யாணம் பண்ணிக்கணும்னு ஆசையா இருக்கு.''

'' அது எப்படியடா, முடியும்?''

''நீங்க ஆசிரமத்துக்குத் தனியா வாங்கிக் கொள்ளுங்கள். இதற்கும் அதற்கும் என்ன சம்பந்தம்?''

''என்னடா, என்னைப் பைத்தியமா அடிக்கிறே. நீ மாப்பிள்ளையா கிடைக் கிறதனாலேதானே அவரே நிதி தரேன்னு சொல்லியிருக்கிறார்.''

''அப்போ, நீங்க இரண்டையும் முடி போடுகிறீர்கள், மாமா!''

''நீ எப்படி எனக்கு உசிரோ, அப் படித்தாண்டா, ஆசிரமமும் என் உசிர்.''

''இரண்டு உசிரை வைச்சுண்டு இந்த வயசுக் காலத்தில் நீங்க கஷ்டப் படக் கூடாது.... என்னைத் தியாகம் செய்து விடுங்கள்.....''

'' என்னடா, கேது...! ஏன்டா, என்னை அழ வைக்கிறே ?''

'' எனக்கு இந்தப் பெண்ணைப் பிடிக்கவில்லை.... குண்டா இருக்கா.''

''இரண்டு குழந்தைகளைப் பெத்தா இளைச்சுடுவாள்.''

'' குழந்தைகளைப் பெத்தப்புறம் குண்டாகத்தான் போவார்கள். இவள் இப்பவே குண்டு !''

''முப்பதாயிரம்டா முப்பதாயிரம்.''

''அது யாருக்குக் கிடைக்கப் போகி றது. எனக்கா... உங்களுக்குத்தானே..? எனக்கு விருப்பமில்லே !''

''சிவ சிவா.... எனக்கு ஏன் ஒரு சகோதரி பிறந்தாள்? பிறந்தவள் ஏன் இவனைப் பெற்றாள்? இவனைப் பெற்றவள் ஏன் செத்தாள்?''



''இந்தக் கேள்வியைத் 'துக்ளக்'குக்கு எழுதிப் போடுங்கோ. சோ நன்னு அதற்குப் பதில் கொடுப்பார். வாங்கிக் கட்டிக்கலாம்.''

ஜம்புநாதன் ஆயாசத்துடன் எழுந் தார். ''அம்பிகே, அகிலாண்டேசுவரி!'' என்று கதறினார்.

கேதாரம் புஸ்தகம் ஒன்றை எடுத் துப் பார்க்கலானான்.

'' நான் உனக்குச் செய்ஞ்சதற்கு எனக்கு நன்னு நன்றி காண்பிச் சிருக்கே.... நான் வரேன்.''

''சரி மாமா!... காப்பி சாப்பிடு கிறீர்களா...? புதன்கிழமை அந்தப் பெண்ணையும் பார்ப்போம்.''

'' வேண்டாம்டா, வேண்டாம்.... இது குண்டு.... அது தட்டுக்குச்சி மாதிரி ஒல்லியா இருக்கு என்பே.....''

கேதாரம் சிரித்தான்.

'' உனக்குச் சிரிப்பாடா வர்றது, சிரிப்பு ? எனக்குப் பத்திண்டு வர்றது, பத்திண்டு.''

''கவலைப்படாதீர்கள், மாமா! என் னோடு பம்பாய்க்கு வாருங்கள். ஒரு ரவுண்டு சுத்துங்கள், நான் பெரிய பெரிய பார்ஸி, மார்வாடி, குஜராத்தி

விலாசங்களெல்லாம் தரேன். சினிமா ஹால் அவ்வளவு பெரிசா மண்டபம் கட்டறதுக்குப் பணம் பெயரும். அங்கேயும் கிழங்கள் நிறைய இருக்கு. ஒரு பத்துப்பேரைக் குத்தாலத்தில் குடியேற்றுங்கள்!''

* * *

ஜம்புநாதன் சென்ற அரை மணி நேரத்துக்கெல்லாம் எஸ். எஸ். வந்தார். கேதாரம் ஆச்சரியத்துடன் வரவேற்றான்.

''என்ன சார்! நீங்கள் வருகிறேன்னு சொல்லி அனுப்பியிருந்தீர்களே... மணி சொன்னான். அவனையும் இன்னும் காணோம்!'' என்றார் எஸ். எஸ். கணபதி.

அவருடைய வார்த்தையை மறுத்துப் பேசுவதில் அர்த்தமும் விவேகமும் இல்லை என்று கேதாரம் நினைத்தான். மணி ஏதோ உளறியிருக்கிறான்..... கேதாரம் சொன்னது பாகவதத்துக்குப் போகலாம் என்றுதான். எஸ்.எஸ். ஸின் வீட்டிலிருந்து புறப்படலாம் என்று மணி சொல்லியிருக்கக் கூடும்.

''இப்பத்தான் வெளியே போய்விட்டு வந்தேன்.''

''பெண்ணைப் பிடிக்கவில்லையாமே?''

கேதாரத்துக்குத் தூக்கிவாரிப் போட்டது.

''யார் சொன்னார்கள்?''

''உங்க மாமா.... இங்கேயிருந்து நேரே என் வீட்டுக்கு வந்தார். பாவம், அவருக்கு ரொம்ப ஏமாற்றமாக இருக்கு.''

''கல்யாணம் பண்ணிக் கொண்டால் எனக்கு ஜென்மம் முழுதும் ஏமாற்றமாக இருக்கும்... நாம் புறப்படலாமா... மணி வரலையே.''

''மணி என் வீட்டுக்கு நேரே வரட்டும். புறப்படுங்கள்.''

''எங்கே, தியாகராய நகருக்குத் தானே?''

''முதல்லே என் வீட்டுக்கு. டிபன் காப்பி உங்களுக்காகக் காத்துண்டு இருக்கு.''

மங்களாவின் முகம் எழவே, கேதாரம் பதில் சொல்லாமல் எழுந்தான்.

''உங்க குவார்ட்டர்ஸ்ம் மாடியிலேதானே?''

''ஆமாமாம்.''

''நீங்கள் பாவம், நான் என் முகத்தைக் கழுவிக் கொள்கிற வரையில் சும்மா உட்கார்ந்திருப்பானேன்? நீங்கள் போங்கள். நான் பத்து நிமிஷத்திலே வர்றேன்.''

''அதுவும் சரித்தான்.... அப்போ நான் போறேன். மணி தப்பித் தவறி இங்கே வந்தால் அவனையும் உடன் அழைத்துக் கொண்டு வாருங்கள்.''

''ஆகட்டும்.''

* * *

ஐந்து நிமிஷங்களில் தயாரான கேதாரம் சென்ட்ரல் மெயின் ஹாலுக்கு வந்தான். மணி ஐந்து அடிக்கப் பத்து நிமிடங்கள். ஐந்தாவது பிளாட்பாரத்தில் ஐந்து மணிக்குப் புறப்படும் கிராண்ட் டிரங்க் நின்று கொண்டிருந்தது.

கேதாரம் விரைந்து நடந்தான். பழம் விற்பவர்கள் இப்போது அங்கே தான் கூவிக் கொண்டிருப்பார்கள்.

அவனுடைய அதிருஷ்டம் ஓர் ஆப்பிள் ஆரஞ்சு வண்டி அருகேயே நின்று கொண்டிருந்தது.

''என்னப்பா விலை, ஆப்பிள்?''

''ஐந்து ரூபாய்க்கு ஆறு.''

''எட்டு கொடு... ஐந்து ரூபாய்க்கு எட்டு.''

''நீங்க கேக்கிற விலைக்குக் காஷ்மீரத்திலேயே கிடைக்காது.... இங்கே பேரமே கிடையாது..... பாருங்க, விலையை எழுதிக் கொடுத்திருக்காங்க.''

''பன்னிரண்டு ஆப்பிள்...'' என்று கூறிய அவன் நிறுத்திவிட்டு ஒரு கணம் யோசித்தான். கணபதிக்கு 'ஏகப்பட்ட குழந்தைகள். ஆளுக்கு ஒன்றாவது கொடுக்க வேண்டாமா?

''பதினைஞ்சு கொடுப்பா... பன்னிரண்டு ரூபாய் வைச்சுக்கோ.''

''கேக்காதீங்க சாமி...! இதிலே என்ன லாபம் இருக்குன்னு நினைக்கிறீங்க.... ஒரு பழம் வித்தால் அஞ்சு பைசா......''

இரண்டு பெரிய காகிதப் பைகளில் அவன் ஆப்பிள்களை எண்ணிப் போட்டான். கேதாரமும்கூட எண்ணினான். இந்த ஆப்பிள் விற்கிற விலைக்காகவாவது, 'அளவோடு பெற்று வளமோடு வாழ வேண்டும்' என்ற வைராக்கியம் அவனுள் எழுந்தது. முக்கோணம் என்றால் மூன்று குழந்தைகளா? ஒரு பக்கம் கணவன், ஒரு பக்கம் மனைவி, இன்னொரு பக்கம் குழந்தை. ஆஹா! ஆப்பிள் விஷயம் இரண்டரை ரூபாயில் தீர்ந்திருக்குமே!

கேதாரத்தை முதன் முதலில் பார்த்தது மங்களாதான்.

''குட் ஈவினிங்'' என்றான் கேதாரம்.

''குட் ஈவினிங்... வாருங்கள்...இது என்ன கையிலே சாமான்கள்?''

''ஹி... ஹி... ஒன்னுமில்லே.... சும்மா... குழந்தைகளுக்கு... நான் யார் வீட்டுக்குப் போனாலும், வெறும் கையோடு போற வழக்கமில்லே.''




# தீபாவளி
# விசேஷ
# விற்பனை!

தீபாவளி 4 புதிய கலர்கள்

• விஜயா • கீதா • பானு • ரத்னா

புதிய கட்டம்: கல்யாணி & குமாரி

## பட்டுச் சேலைகள் - சோளி பீஸ்கள்

## பாவாடை துண்டுகள்

மற்றும்

## நூல் சேலைகள்

## மில் ஜவுளிகள்

# நல்லி
# சில்க் எம்போரியம்

**பாண்டி பஜார்**

தியாகராய நகர் · போன்: 442567 · சென்னை-17

"நல்ல கொள்கை."

அவள் சொல்லவும் சுஜா ஓடி வரவும் சரியாக இருந்தது.

"சுஜா! மாமா சாத்துக்குடி வாங்கிண்டு வந்திருக்கா. வாங்கிக் கொள்... அப்பா எங்கே... கூப்பிடு... இப்போ சாத்துக்குடி ஸீஸன். வெளியே வாங்கினால் கொஞ்சம் சீப்பாக இருக்கும்."

பையில் இருக்கும் ஆப்பிளைப் பார்த்த பிறகுதான் மங்களா அப்படிப் பேசுகிறாளோ என்று தோன்றியது கேதாரத்துக்கு.

"அப்படியா? சாத்துக்குடி சீசன்னு தெரியாமல் போச்சே.... தெரிஞ்சிருந்தால் ஆப்பிளை வாங்கியிருக்க மாட்டேன்......"

"சுஜா, ஆப்பிளாம் டீ... சாத்துக்குடி இல்லையாம்... ஏன் இன்னும் நிற்கிறீர்கள்....? உட்காருங்கள் சார். அப்பாவைக் கூப்பிடேண்டி சுஜா...."

"நீயே கூப்பிடு."

"பார்த்தீர்களா, என்னை அதிகாரம் பண்ணுகிறாள்."

மங்களா உள்ளே சென்றாள். டீப்பாயின்மேல் வைத்த காகிதப் பொட்டணங்கள் சற்றே திறந்திருக்க, சுஜா இடுக்கு வழியாகப் பார்த்தாள்.

"எடுத்துக் கொள்" என்றான் கேதாரம். மனத்தைப் பன்னிரண்டு ரூபாய் வதைத்தது. ஓர் ஆப்பிளை நறுக்கி டிபனுடன் தரமாட்டார்களா என்று அவன் ஏங்கினான். வறட்டுக் கௌரவத்தை இவ்வளவு விலை கொடுத்து வாங்க வேண்டியது அவசியம்தானா என்றும் தன்னைத்தானே கேட்டுக்கொண்டான்.

"ஊஹூம்... அம்மாதான் எங்களுக்கெல்லாம் கொடுப்பாள்."

"உன் பெயர் என்ன?"

"சுஜாதா."

"சுஜான்னு கூப்பிடுவாளா?"

"ஆமாம்."

"எந்த வகுப்பிலே படிக்கிறே?"

"அப்பர்கேஜி பாஸ் பண்ணியாச்சு. ஒண்ணும் கிளாஸ். வர்ற வியாழக்கிழமை ஸ்கூல்லே எனக்கு ஹாப்பி பர்த்டே பாடுவார்கள். நான் எல்லாருக்கும் டாஃபி கொடுப்பேன்."

"பேஷ்! பேஷ்! எனக்கும் தருவாய் இல்லியா?"

"ஐயய்யோ! நீ பாயும் இல்லே, கேர்ளும் இல்லே... என் வகுப்பிலே படிக்கிறவாளுக்குத்தான் டாஃபி."

"சுஜா! மாமாகிட்டே என்ன பேசிண்டிருக்கே... குட் ஈவினிங் சொன்னியா?" என்று கேட்டுக் கொண்டே நுழைந்தார் கணபதி. பின்னால் தொடர்ந்து மங்களாவும் வந்தாள்.



"மாமா டாஃபி கேக்கிறா, அப்பா... டாஃபி... பிறந்த நாளுக்கு டாஃபி வேணுமாம்."

"நான் கொண்டு தரட்டுமா?" என்று மங்களா புன்முறுவலித்தவளாய்க் கேட்டாள்.

"மங்கா! அம்மாகிட்டே டிபன் கொண்டு வரச் சொல்லு."

அவள் உள்ளே சென்றாள்.

கேதாரம் டீபாயின் மேல் இருக்கும் ஆப்பிள் பொட்டணங்களையே பார்த்தவனாய் இருந்தான்.

"மணி இன்னும் வரலையே."

"ஆறரைக்குத்தானே பாகவதம்?"

"பெயருக்குத்தான் ஆறரை. ஏழு ஆயிடும். முன்னாடியே போனால் ஸ்வாமி தரிசனம் பண்ணிவிட்டு, நல்ல இடமாப் பிடிச்சு உட்காரலாம்."

லண்டனில் நடந்த தபால் ஊழியர் வேலை நிறுத்தத்தின்போது தந்திகள் மட்டுமே - அதுவும் சாவு சம்பந்தப்பட்ட தந்திகள் மட்டுமே அனுப்பப்படும் என ஏற்பாடு செய்திருந்தார்கள். உடனே, ''அங்கிள் வில்லியம் இறந்துவிட்டார். இம்பீரியல் ஹோட்டலை விற்று விடு'', ''ஆன்ட் ஆன் போய்விட்டாள். அவளது கிராமத்து வீட்டை வாங்கி விடு'' என்பதுபோல் பலவித 'வியாபாரத் தந்திகள்' பறக்க ஆரம்பித்து விட்டன!



''நேஞ்''

---

சங்கரி பலகாரத் தட்டுடன் வந்தாள். மங்களாவின் கையில் காப்பி இருந்தது.

''சங்கரி! நான் கார்த்தாலே, சொன்னேனே அவர்தான் இவர்.... டி. இ... இவள்தான் என் மனைவி.... சங்கரி....'' என்றார் கணபதி.

''நமஸ்காரம்.''

''மாமி சௌக்கியமா?''

''உம்.''

''ரெண்டு பெண்கள் உண்டே, கலியாணமாச்சா?'' சங்கரி கேட்டாள்.

''ஊஹூம்... இல்லே. வரன் பார்த்துக் கொண்டிருப்பதாக மாமா சொன்னார்.''

கேதாரம் காப்பியுடன் நிற்கும் மங்களாவைப் பார்த்தான். தன் பதில் அவளுக்குத் திருப்தி அளித்திருப்பதை அவளுடைய முகம் காட்டுவதாகப் பிரமை தட்டியது.

''இவரும் இன்னிக்கு ஒரு பெண்ணைப் பார்த்து விட்டுத்தான் வருகிறார்'' என்றார் கணபதி.

கேதாரம் சிரித்தான்.

'' பெண் ரொம்பக் குண்டோ ? தைராய்டு கோளாறுன்னு கேள்வி '' என்றார் கணபதி.

கேதாரம் பதில் சொல்லவில்லை. மங்களாவைக் கவனித்தான். அபீதம் குண்டாக இல்லாமல், ஒல்லியாக அழகாக இருந்திருந்தால் அவன் வேண்டாம் என்று சொல்லியிருக்கமாட்டான் என்று அவள் நினைப்பதாக அவனுக்குத் தோன்றியது. தோன்றிய கணமே அவன் தன்னை நொந்து கொண்டான். ஒரு சிறந்த அழகியை அவன் வேண்டாம் என்று ஒதுக்கினால் தான் மங்களாவுக்கு உண்மையாகத் திருப்தி பிறக்கும் என்று அவன் நினைத்தான்.

''புதன்கிழமையும் பெண் பார்க்க வேண்டும் என்கிறார் மாமா... நானும் அவருடைய நச்சரிப்புத் தாங்காமல் சரின்னு சொல்லியிருக்கேன்.''

'' சீக்கிரத்தில் முடித்துவிட வேண்டியதுதானே ?'' என்றார் கணபதி.

'' சரிதான்.... ஆனால் எனக்குப் பிடிக்கவில்லை. மாமா பார்த்திருக்கிற அடுத்த இடம் நல்ல இடம்தான்.... பெண் எம். ஏ. ரொம்ப நன்னா வீணை வாசிப்பாளாம்.... கிரேப் ஜூஸ்..... பைனாப்பிள் ஜாம் எல்லாம் பண்ணத் தெரியுமாம்.... சிவப்பாகவும் அழகாகவும் இருப்பாளாம்.''

''பின் என்ன? சூட்டோடு - சூடா அவள் கழுத்திலே மூணு முடிச்சுப் போட்டுவிட வேண்டியதுதான்... சமையல் தெரியுமோ தெரியாதோ, இந்தக் காலத்துப் பெண்களுக்கு ஜூஸூம் ஜாமும் நன்றாய்ப் பண்ண வர்றது '' என்றாள் சங்கரி.

'' எதுக்காக மங்களாவைக் குத்திக் காட்டறே?'' என்று சொல்லிச் சிரித்து விட்டு மங்களாவைப் பார்த்தார் கணபதி.

'' இவ்வளவு இருந்தும் நான் என் மனசுக்குள்ளே வேண்டாம்னு தீர்மானம் செய்து விட்டேன் '' என்றான் கேதாரம்.

''ஏன்?'' — கணபதி.

''எனக்குப் பிடிக்கவில்லை. அவ்வளவு தான்.....''

''காரணம் இருக்கணுமே?''

'' ஒவ்வொருத்தன் மனசிலேயும், வரப் போகிற மனைவி எப்படி இருக்க வேண்டும் என்று ஓர் ஆசை, ஓர் எண்ணம் இருக்கும். அதன் பிரகாரம் இல்லாவிட்டால் எப்படி?''

கணபதி சிரித்தார்.

சங்கரி உள்ளே திரும்பினாள்.

மங்களா புன்முறுவலை நிறுத்தாமல் சொன்னாள்:

''அவர் சொல்வது ரொம்ப சரி, அப்பா! அதே போல் ஒவ்வொரு பெண்ணும் தனக்கு வரவேண்டிய கணவர் எப்படி இருக்கணும் என்று நிர்ணயம் செய்து கொள்கிறாள். ஆனால் இரண்டு பேர்களுக்கும் லட்சியக் கணவன் மனைவி அமைவதுதான் துர்லபம். மிஸ்டர் கேதாரம் தன் மனசிலே உருவாகியிருக்கிற பெண்ணைச் சந்திக்கலாம். ஆனால் அப்பெண்ணின் மனசிலேயும் மிஸ்டர் கேதாரம் மாதிரி ஒரு மனிதர் கணவராக உருவாகி இருக்கணுமே.....?''

'' அப்படி வந்தால் அதிசயம்னு சொல்றியா ?'' என்று கேட்டார் கணபதி.

''ஆமாம் !''

''அதிசயம் நடக்கிறதுண்டு, சார் !'' என்றான் கேதாரம்.

'' என்ன அதிசயம்? என்ன டிபன் ? இது என்ன பாக்கெட்....?''

மணி கேட்டுக் கொண்டே வந்தவன், காகிதப் பொட்டணத்திலிருந்து ஓர் ஆப்பிளை எடுத்துக் கடிக்கலானான்.

கேதாரம் அவனைக் கழுத்தை நெரிக்கும் ஆத்திரத்துடன் உன்னிப்பாக ஊடுருவிப் பார்த்தான். (தொடரும்)

# பயர்ஸ்டோன் படைத்திடும் மிக வலிமையான டயருக்கு ஈடுநிற்குமா உங்கள் கார் டயர்கள்?

ஓட்டுவதற்கென மிகக் கண்டிப்பான தேவைகளை கருத்திற்கொண்டு உருவாக்கப்பட்ட டயர் இது. கரடுமுரடான சாலைகளிலும் சுலபமாக ஓடக்கூடிய டயர். கோடை வெப்பத்திற்கு ஈடுகொடுக்கக் கூடிய டயர். மழைபெய்த ஈரச் சாலைகளிலும் பாதுகாப்புத் தரும் டயர். அடிக்கடி நிறுத்தி நிறுத்தி ஓட்டும் கடுவினைகளுக்கு நன்கு தாக்குப் பிடிக்கும்.

இத்தகைய உறுதியை நீங்கள் ஒரு பயர்ஸ்டோன் டயரிலே பெறக் காரணம்: அதற்கென்றே உரித்தாக அமைந்த மும்மடங்கு வலிமையுள்ள கட்டுமானம்—டயருடன் டிரெட்டை ஒட்டிப் பிணைக்கவும், பக்கவாடுகளைப் பலப்படுத்தவும், கார்டுகளை இன்சுலேட் செய்வதற்குமான தனிப்பட்ட முறை இது.

கொடுக்கும் பணத்திற்குக் கூடுதலான கிலோமீட்டர்களும், அதிகப் பாதுகாப்பும் வேண்டுமானால் உங்களுக்குத் தேவை பயர்ஸ்டோன் படைத்திடும் **வலிமையான** டயர் தான்.

**40 ஆண்டுகளுக்கு மேலாக நம் நாட்டுக்குப் பணிபுரிவது.**

FOCUS W-24(C) TH

**பயர்ஸ்டோன்**




இந்தியாவெங்கும் வாங்கக் கிடைக்கிறது—இன்றே காணுக உங்கள் பயர்ஸ்டோன் விற்பனையாளரை.

# இவர் பாராட்டுக்குரியவர்

"எங்கடன் பணிசெய்து கிடப்பதே" என்ற ஒரே குறிக்கோளுடன் பிரம்மஸ்ரீ ஆர். கல்யாண சுந்தர அய்யர் சென்னையில் இருந்து வருகிறார்.

திருப்புகழை நாடு முற்றிலும் அமுதமாக வாரி வழங்கிய வள்ளிமலை வள்ளல் திருப்புகழ் சச்சிதானந்தரின் மெய்ச் சீடர் அவர். அரசினர் கூட்டுறவுத் துறையில் உயர்ந்த பதவிகள் வகித்த போதிலும் ஆன்மீகத் துறைக் கூட்டுறவே இவரிடம் மல்கியிருந்தது.

வள்ளிமலை வள்ளல் அமுதகானமாக வழங்கிய திருப்புகழைக் கேட்டுக் கேட்டு, அதில் ஈடுபட்டுத் தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்னுமாப் போல் திருப்புகழ் உரையை வெளியிட முன்வந்தார். திருப்புகழை உலகுக்குதவிய பரம்பரையினரான தணிகை மணி டாக்டர் வ. சு. செங்கல்வராய பிள்ளையவர்களைத் தூண்டி அரிதின் முயன்று தம் வாழ்நாள் நோன்பாகத் திருப்புகழுரையை எழுதச் செய்து பகுதி பகுதியாகத் தாமே தனி நின்று முருகவேள் பன்னிரு திருமுறையாக வெளியிட்டுள்ளார். காஞ்சி பெரியவர் இவ்வுரையை "திருப்புகழ் பெரிய பாஷ்யம்" என அருளியுள்ளார். இவர் முயன்று வெளியிடவில்லையென்றால் திருப்புகழ் உரை தமிழகத்துக்குக் கிடைக்கும் வாய்ப்பே இல்லாமல் போயிருக்கும். இந்த உரையும், பதிப்பும் எவ்வளவு பக்கங்கள் தெரியுமா? சுமார் 5000 பக்கங்கள். ஒரு பல்கலைக் கழகமோ, இலக்கியக் குழுவோ, அற நிறுவனமோ சாதிக்காத திருப்பணியைத் தாம் ஒருவரே தனிநின்று நிறைவேற்றியுள்ளார். தம் சாதனையைத் தம்பட்டம் அடித்துக்கொள்ளாமல் குடத்தினுள் தீபமாக ஆற்றி வந்துள்ளார். இது மாத்திரமா? நமது சமீப காலத் தலைமுறையினரையே நாம் சரியாக அறிந்து கொள்ளாத இந்தக் காலத்தில் நம் நாட்டில் அவதரித்த நம் மூதாதையர்கள் ஆன அருணகிரிநாதர், அப்பைய தீக்ஷிதர் முதலிய புண்ணிய புருஷர்கள் பன்னிருவர் சரித்திரத்தைப் பல வழிகளில் சரித்திரச் சான்றுகள், சாசன வெளியீடுகள், கல்வெட்டுக்கள், செப்புப் பட்டயங்கள் முதலியவற்றை ஆராய்ந்து அழகிய பைந்தமிழ் நூலாகப் பல பெரியார் பாராட்டுக்களுடன் அண்மையில் தவச் செல்வர் வரலாறென வெளியிட்டுள்ளார். இந்த நூலில் இந்தத் தவச் செல்வர்கள் வரலாறேயன்றி காமகோடி, சிருங்ககிரி பீடத்தில் ஆட்சி புரிந்த மகனீயர்களின் மகிமைகளையும் அவர்கள் இயற்றிய நூல்களின் பெயர்களையும் விளக்கங்களையும் காணலாம். அதுடனன்றி கோவிந்த தீக்ஷிதர், வேதாந்த தேசிகர், ராகவேந்திர ஸ்வாமிகள், விவேகானந்தர், வி. கிருஷ்ணசாமி அய்யர், சி. வி. சாமிநாதய்யர் போன்ற பல பெரியவர்களைப் பற்றிய குறிப்புக்களையும் தக்க ஆதாரங்களுடன் இந்த நூலில் கொடுத்துள்ளார். ஸ்ரீ சக்கரம், மஹாமேரு, அர்த்த மேரு உள்ள தலங்களும் விளக்கங்களுடனும் படங்களுடனும் இந்த நூலில் விளங்குகின்றன. இவர் முயற்சியை இந்த நூலைப் படித்தால் தான் அறிந்து கொள்ள முடியும். மங்கள நூலகம், சென்னை-34 பதிப்பித்துள்ளது.





தம்மை ஆண்டருளிய குருநாதர் ஸ்ரீ வள்ளிமலை சுவாமிகள் திருச் சரிதத்தை ஆங்கிலத்திலும், தமிழிலும் வள்ளிமலை வள்ளல் என்ற தலைப்பில் வெளியிட்டுள்ளார். இவ்வளவும் இவர் தாமே முயன்று தனி நின்று ஆற்றிய பணிகளாகும்.

இவரது தொண்டின் சிறப்பைத் தணிகைமணி டாக்டர் வ. சு. செங்கல்வராய பிள்ளை,

"தொடங்காதல் விடாமுயற்சி
இவையுடனே இதன்
முன்னாத் தோர்ந்து
யாரும்

தொடங்காத முருகவேள்
திருமுறையை வெளி
யிட்ட தூயோன்."

எனவும், திரு வாகீச கலாநிதி கி.வா. ஜகந்நாதன் அவர்கள்

"முருகனருள் பரவுவணம்
இன்னபல வகையியற்றி
முயற்சி ஓங்கி
பெருகு தொண்டில்
முன்நிற்கும் கல்யாண
சுந்தரன்"

எனவும் பாராட்டியுள்ளனர்.

இவ்விதம் பாராட்டுப் பெற்ற பெரியார் அறிமுகப்படாமலிருப்பது தமிழ் மக்களுக்கு இழுக்கு என்ற எண்ணம் தோன்றியதால் இவற்றை எழுதலானேன்.

சளியாமல் மேனோர்
சரித்திரஞ்செல் வோனர்
களியாம் புகழுரையைக்
கண்டான் -- கல்யாண
சுந்தர ஐயன்
துணைக்கரண மாமர
விந்தம் சிரம்புனைந்துய்
வோம்.

—எம். கே. ராமன்
உதவி கௌரவ அமைச்சர்,
டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம், திருவான்மியூர், சென்னை - 41.




# கிளீயர்டோன்-உன்னத மின்சார சாதனங்கள்

கிளீயர்டோன் எல்லாவித மின்சார சாதனங்களுக்கும் ஈடற்ற பேர் பெற்றது. அனைத்துமே நம்பகம், உறுதி, நீடித்த உழைப்பு ஒருங்கிணைந்தவை. நாடெங்கிலுமுள்ள பல்லாயிரம் இல்லத்தரசிகளின் பாராட்டுப் பெற்றவை. ஒவ்வொரு தயாரிப்பும் ஆண்டுக் கணக்கான அனுபவ நுட்பத்தையும், தொழில் நுணுக்கத்தையும் பின்னணியாகக் கொண்டவை.

உங்கள் இல்லங்களுக்கேற்ற கிளீயர்டோன் மின்சார சாதனங்களையே வாங்குவீர். அது நீங்கள் அளிக்கும் பணத்திற்கும் பன்மடங்கான பலனையே தருகிறது.

நாடு பூராவும் உள்ள 1500-க்கும் அதிகமான கிளீயர்டோன் விற்பனையாளர்கள், விற்பனைக்குப் பின்னும் எப்போதும் சேவைசெய்ய காத்திருக்கிறார்கள்.

இஸ்திரி பெட்டிகள்

ஹாட் பிளேட்கள்

சுபரீம் கெட்டில்கள்

பேக்கிங் ஓவன்கள்

பிரஸ் லிப்ட் டோஸ்டர்கள்

குக்கிங் ரேஞ்சுகள்

மாஸ்பான் கெட்டில்கள்

வாட்டர் ஹீட்டர்கள்

வாட்டர் பாய்லர்கள்

ஹாட் ஃபுட் கேபினெட்கள்

சுவர்க் கடியாரங்கள்

**நேஷனல் ரேடியோ அண்டு எலக்ட்ரானிக்ஸ் கம். லிட்**
(ஜெனரல் ரேடியோ அண்ட் அப்ளையன்ஸஸ் பிரிவு) பம்பாய்-கல்கத்தா-டெல்லி-சென்னை.

ULKA KL-3-TH

# நீர் மேல் எழுத்து

பெருங்காப்பியன்

'ஸர்ஜிகல்' வார்டில் பெரும் அமளி துமளி!

'வார்டுபாய்' கூப்பாட்டுக்கு அலறியடித்துக்கொண்டு டாக்டரும் நர்சும் வந்து சேர்ந்தார்கள்.

சுந்தரேசன் தலையிலும், காலிலும், கையிலும் கட்டுக்களுடன் துடித்துக் கொண்டிருந்தார்.

உடல் வலியோடு இதய வலியும் கூட்டுச் சேர்ந்து கொண்டிருந்தது.

"சார்! நீங்களெல்லாம் இப்படிக் கனே பரப்படுத்தினால் எப்படி? மனத் திடத்தோடு இருந்தால்தான் எந்த வலியுமே குறையும். மருந்தால் பாதி நோயையும் மனோ பலத்தால் பாதி நோயையும்தான் தீர்த்துக் கொள்ள முடியும். ப்ளீஸ்... கொஞ்சம் அமைதியாய் இருங்க..."

சுந்தரேசனின் அரற்றலைத் தாங்க முடியாமல், டாக்டர் பொறுமையுடன் சொல்லிக் கொண்டிருந்தார்.

"வைஜயந்தி!..... என்னால் வலியைத் தாளவே முடியவில்லை. கொஞ்சம் பிடித்து விடேன்."

சுந்தரேசன் சத்தமிட்டுக் கத்தினார். அவர் கண்கள் மூடியிருந்தன.

ஆனால் அவர் அருகில் வைஜயந்தி இல்லை.

டாக்டர் நர்ஸைப் பார்த்து ஏதேதோ முணுமுணுத்தார்.

நர்ஸ், சுந்தரேசனின் உடலை மெதுவாக—இதமாகப் பிடித்து விட்டாள்.

"வைஜயந்தி...! இனிமேல் நான் உன் முகத்தையே பார்க்க மாட்டேன் எப்படிப் பார்ப்பேன்? என்னைப் பார்க்க நீ சம்மதிப்பாயா?.. இனிமேல் நான் குடிக்கவே மாட்டேன்! இல்லை... அவ இங்கே இல்லே. என்னைப் பார்க்கவே கூடாதுன்னு போயிட்டா. வைஜயந்தி... நீ போயிட்டே..."

சுந்தரேசன் அழ ஆரம்பித்து விட்டார்.

தலையை உசுப்பிக் கொண்டு, படுக்கையை உதைத்துக் கொண்டார்.

"மிஸ்டர் சுந்தரேசன்! உங்க மனைவிக்கு எந்த ஆபத்தும் இல்லே. சீக்கிரமே பிரசவிச்சுடுவாங்க. முதல்லே உங்கள் உடலைப் பார்த்துக்குங்க... நீங்க நல்லா இருந்தாத்தான் அவர்களையும் பாதுகாக்க முடியும்."

"இல்லே டாக்டர்! அவள் என்னை... நான் அவளை... வைஜயந்தி...இ...இ...!" — சுந்தரேசனின் குரல் சங்கொலிபோல் அழுத்தியது.

நர்சும் வார்டு பாயும் அவரை அழுத்திப் பிடித்துக் கொண்டார்கள்.

வலியையும், உடல்மீதுள்ள கட்டையும் பொருட்படுத்தாது படுக்கையிலேயே புரண்டார். வாய் குழறிப் பேசினார். சிரித்தார். அழுதார், மருண்டார். அதிர்ச்சியடைந்தவர் போல அமைதியானார். மீண்டும் மீண்டும் எதையாவது செய்யத் தொடங்கினார்.

படுக்கையில் பிணைத்தவாறே டாக்டர் பரிசோதித்தார்.

"நர்ஸ்! லார்கேக்டில் இன்ஜெக்ஷன் ஒன்று போட்டுவிட்டு இஃகுபிரியம் மாத்திரை ஒரு மணிக்கு ஒன்று கொடுங்கள். முதலில் கொண்டு போய் 'நியூராலஜி' வார்டில் சேர்த்து வையுங்கள்" என்று கூறிவிட்டு, தலைமை டாக்டரை அழைத்துக்கொண்டு வர அவர் சென்றுவிட்டார்.

மூன்றாம் நாள்...

தலைக் கனம் சற்றுக் குறைந்தது போலவும், நினைவில் தெளிவு ஏற்படுவது போலவும் இருந்தது சுந்தரேசனுக்கு!

கண்ணைத் திறந்து வார்டு முழுவதையும் படுத்தவாக்கிலேயே பார்த்தார்.

பக்கத்தில் நர்ஸ் நின்று கொண்டிருந்தாள்.

"நான் இங்கே எப்படி வந்தேன்?..... வைஜயந்தி எங்கே?..." சுந்தரேசன் கண்களை இறுக்கி மூடிக் கொண்டார்.



கடிகாரம் வாங்கியவர் : இந்தக் கைக் கடிகாரம் என் ஆயுசு முடிகிற வரையிலும் உழைக்கும்னு சொன்னால் போதாதா? என் கை ரேகையையும் பார்த்து இன்னும் இரண்டு வருஷத்தில் எனக்கு ஒரு கண்டம் இருக்குன்னு வேறு சொல்லணுமா?

---

தேக்க முடியாமல் வழிந்து கொண்டிருந்த கண்ணீரை நர்ஸ் துடைத்து விட்டாள்.

அவரது கண் திறந்து இமை படபடத்தது.

மனக் கதவும் திறந்து அதனுள் சம்பவக் கோவை நுழைந்தது.

நீருற்றுள்ள இடத்தில் வெளிப்படும் அதன் ஓட்ட ஒலியைப் போல் அவர் நெஞ்சத்துள்ளும் ஒருவித ஒலி ஏற்பட்டு விழிப்பை உண்டாக்கிக் கொண்டிருந்தது.

*　　　　*　　　　*

“நீங்க இப்படி வேட்டியும் ஜிப்பாவும் போட்டுக் கொண்டு வயோதிகரைப் போல் இருப்பது எனக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லே. ட்ரிம்மா டிரஸ் செய்யுங்களேன்... தோற்றத்தால் ஏன் இளமையைக் கெடுத்துக் கொள்றீங்க...?”

“வைஜயந்தி! நீ... என்னை விரும்புகிறாயா, அல்லது என் இளமையின் தோற்றத்தை விரும்புகிறாயா?”

“இது என்ன கேள்விங்க? நீங்க இளமையா இருக்கவேதான் உங்களை விரும்பறேன். இப்போ உங்களை...உங்க மனத்தை... எல்லாமே எனக்குப் பிடித்து விட்டது. இப்போ உங்க மனத்துக்கு நான் அடிமையாகி விட்டேன். இருந்தாலும் எப்பவுமே உங்களை வாலிப மிடுக்கோடு பார்த்து அனுபவித்துக் கொண்டிருக்க வேண்டுமென்று விரும்புகிறேன்.”

வைஜயந்தியின் வேண்டுகோளுக்குச் சுந்தரேசன் செவிசாய்த்து விட்டார்.

அவர் ஆடை, அலங்காரம் அனைத்தும் நவீன பாணியில் மாறிக் கொண்டிருந்தன.

வைஜயந்தி ஆங்கிலப் பள்ளி ஒன்றில் தலைமை ஆசிரியை.

சுந்தரேசன் அந்தப் பள்ளிக்கு அடுத்த கட்டிடத்தில் இருந்த தொல்லியடைந்த கல்லூரி மாணவர்களுக்கென்று ஏற்படுத்தியிருந்த தனிப் பாடக் கல்லூரி முதல்வர்.

இருவருக்கும் பழக்கம் ஏற்பட்ட கதையை விளக்கினால், அதுவே ஒரு ‘லவ் ஸ்டோரி’ என்னும் நூலாக அமைந்துவிடும்.

காதல் வளர்ந்துகொண்டிருப்பது போதும். இன்னமும் அதன் வழியினை விளக்கிச் சொல்லிப் பண்பாடு கெட நான் துணையாய் நிற்கப் போவதில்லே.

சுந்தரேசன் வைஜயந்தியைப் பதிவுத் திருமணம் செய்து கொண்டார்.

எதை யெதை அவள் நாகரிகமென்று எண்ணினாளோ, எப்படி எப்படி வாழ்க்கையை அனுபவிக்க வேண்டும் என்று அவள் எண்ணினாளோ அப்படி யெல்லாம் சுந்தரேசன் வாழ்ந்து கொண்டிருந்தார்.

அன்று...

தாம்பத்ய வாழ்க்கையின் முதலாண்டு நிறைவு நாள்.

அவள் நடத்தத் திட்டமிட்டிருந்த விழாவும் இரவில்தான்.

“அன்பே! இன்று...நம் நகரில் உள்ள அத்தனை நைட் கிளப்பையும் பார்த்துவிட்டு வர வேண்டும். இரவு பத்து மணிக்கு வீட்டை விட்டுப் புறப்படலாம். வெளியில் செல்வதானால் நேரத்தோடு வந்து விடுங்கள்...”

**வைஜயந்தியின் வாயிதழிலிருந்து சிந்தும் அத்தனை சொல் முத்தும் சுந்தரேசனுக்குப் பிறப்பிக்கப்படும் ஆணைதான்.**

**அவரும் அந்த ஆணையை மீறுவதில்லே.**

**அவளின் இளமை, உடல் அமைப்பு, போதை தரும் பார்வை, குழிவிழும் கன்னத்தின் சிரிப்பு ரேகை, கவர்ச்சியான ஆடை அலங்காரம் — அத்தனையும் அவரை அப்படிக் கீழ்ப்படிய வைத்தன!**

**சுந்தரேசன் வெளியில் எங்கும் செல்லவில்லே.**

விசிட்டர்ஸ் அறையில் உள்ள சோபாவில் சாய்ந்தபடியே ‘ஆஷ் ட்ரேயை’ அருகில் வைத்துக் கொண்டு ‘த்ரீஃபைவ்’ சிகரெட்டைப் புகைத்துக் கொண்டே யிருந்தார். கருகிய துண்டுகள் டிரேயில் நிரப்பிப் புகையை வெளிக் கிளப்பிக் கொண்டிருந்தன.

நைட் கிளப்புகளுக்குப் புறப்படுமுன், அவர் அணிந்து கொள்ள வேண்டிய ஆடைகளை அவளே தேர்ந்தெடுத்து அவர் முன் கொண்டு வந்து வைத்தாள்.

“சீக்கிரமா டிரஸ் செய்துக்குங்க. இதோ நானும் தயாராகிடறேன். டிரைவர்கூட வேண்டாம். நீங்களே காரை ஓட்டுங்க...” என்று சொல்லிக் கொண்டே அவளாக செலக்ஷன் செய்து வைத்திருந்த மேல்நாட்டுப் பாணி ஆடையை உடுத்திக் கொண்டாள்.

சுந்தரேசனுக்கு மனம் என்னவோ உறுத்தியது. “வைஜயந்தி! நிறை மாதத்தில் இப்படி ஆடை அணிந்து கொண்டு அதிலும் இரவில் பார்ப்பவர்களுக்கு விரசம் ஏற்படும் வகையில் வெளியில் செல்வது எனக்குக் கொஞ்சமும்

# பாலுசேரி பெனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்

"வீணாவிகார்", 17-A, ஃபிளாங் ரோடு.
ஷண்முகானந்தா ஹாலுக்கு அடுத்தது,
சயான் (கிழக்கு), பம்பாய்-22. D.D.
போன் : 47 14 55 தபால்பெட்டி : 6759 • தந்தி : 'GROWRICH'

உன்னத சேவையில் 25-வது ஆண்டு ஆரம்பம்
ஏலம் கேட்ட பிறகு டிவிடெண்டு அடையும் வசதியுள்ள சீட்டுகள்

1971 அக்டோபர் மாதம் புதிய குரூப்புகள்

| குறுகிய காலம் : 25 மாதங்கள் | | | நீண்ட காலம் : 40 மாதங்கள் | | |
|---|---|---|---|---|---|
| சேருவதற்கு கடைசி தேதி: 9-10-1971 | | | சேருவதற்கு கடைசி தேதி: 30-10-1971 | | |
| முதல் ஏலத் தேதி : 10-10-1971 | | | முதல் ஏலத் தேதி : 31-10-1971 | | |
| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
| | ரூ. | ரூ. | | ரூ. | ரூ. |
| B | 100/- | 2,500/- | E | 500/- | 20,000/- |
| C | 50/- | 1,250/- | F | 250/- | 10,000/- |
| F | 25/- | 625/- | | | |
| G | 20/- | 500/- | G | 125/- | 5,000/- |

நீண்ட காலம் : 50 மாதங்கள்—ஏலம் எடுக்காத சீட்டுதாரர்களுக்கு மட்டும் டிவிடெண்டு உண்டு

சேருவதற்கு கடைசி தேதி : 16-10-1971 :: முதல் ஏலத் தேதி : 17-10-1971

| வகுப்பு | தவணை | சீட்டுத் தொகை |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| LTA | 100/- | 5,000/- |
| LTB | 50/- | 2,500/- |
| LTD | 20/- | 1,000/- |

வேலை நேரம் : காலை 8 மணி முதல் 10-30 வரை : மாலை 4 மணி முதல் 7-30 வரை

வார விடுமுறை - திங்கட்கிழமை

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம் :
*"பாலுசேரி பில்டிங்ஸ்"*
3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி, தபால் பெட்டி: 414, சென்னை - 5
கிளைகள் : பெங்களூர் - கல்கத்தா - புது டெல்லி

*இலவச பிரசுரத்திற்கு எழுதுங்கள் !*

சீட்டுகள் ஒதுக்குதல்
கம்பெனியின் உரிமையைப் பொறுத்தது




## எமது வெள்ளி விழா ஆண்டு
## எங்கள் சேவை உங்களுக்குத் தேவை

பிடிக்கவில்லை'' என்று சொல்லும் துணிவு இல்லாததால் ஏற்பட்ட முக மாற்றத்தை மறைத்துக் கொள்ள, நிறைய ரோஸ் பவுடரைத் தடவிக் கொண்டாள்.

அவர்களின் நிறைவு நாள் பவனி தொடங்கியது!

தலைநகரத்தில் முக்கிய புள்ளிகள் ஏறி, இறங்கி வரும் ஒவ்வொரு நைட் ஷெப்பின் எதிரிலும் அவர்களின் கார் நின்று ஓய்வு எடுத்துக் கொண்டு — ஓடிக் கொண்டிருந்தது.

வித்தைக் காட்சிகள், காபரே நடனங்கள், ராக் அண்டு ரோல், மேற்கத்திய சங்கீத நடனம் — இப்படி ஒவ்வொன்றாக, ஒவ்வொரு ஷெப்பிலும் ரசித்தபடியே அந்த லயிப்புக்குப் போதை உண்டாக்கும் உயர் ரக மதுவையும் அருந்திக் கொண்டு விழாவை நிறைவுறச் செய்து கொண்டிருந்தார்கள்.

வைஜயந்தி என்னவோ சற்றுக் குறைவாகத்தான் குடித்திருந்தாள்.

சுந்தரேசனால் எழுந்து நடக்க முடியவில்லை.

வைஜயந்தியின் முகத்தைக் கூடச் சரியாகப் பார்த்துப் புரிந்து கொள்ள முடியவில்லை.

அவர் என்னென்னவோ பிதற்றினார். அவர் காதலித்த படலத்தை ஒப்புவிக்கத் தொடங்கினார்.

பிறக்கப் போகும் குழந்தையைச் சீராட்டி வளர்ப்பேனென்று தாலாட்டுப் பாடினார். வைஜயந்தியின் மீது வைத்திருந்த மாறாத அன்பை — வாழ்க்கைப் பிணைப்பை வார்த்தைக் கோவையாய் வர்ணித்துக் கொண்டிருந்தார்.

இரவிலும் உறங்கா விழியோடு அலைந்து கொண்டிருந்தவர்களுக்கெல்லாம் 'அவர்கள்' காட்சிப் பொருளானார்கள்.

அந்த நிலையிலேயே அவரை விட்டு வைத்திருக்க வைஜயந்தி விரும்பவில்லை.

தானாவது டிரைவ் செய்து கொண்டு வீட்டுக்கு அழைத்துப்போய் விடலாமென அவள் எண்ணினாள்.

சுந்தரேசன் அதற்குச் சம்மதிக்கவில்லை.

''வை...ஜெயந்...நீ ஆண்பிள்ளை நானா நீயா?...நீ சொல்றதை நான் கேட்கணுமா....? எனக்கு என்ன புத்தி சுவாதீனமில்லேன்னு நினைச்சுட்டியா?...இன்னும் நானு ஷெப்புக்கு வரச் சொன்னாலும் வருவேன்...இன்னமும் குடிக்கச் சொன்னாலும் குடிப்பேன்...உன் பேச்சைத் தட்டவே மாட்டேன்.... நீ எனக்கு மனைவி மட்டுமில்லே...தெய்வமும் கூட. வா! வீட்டுக்குப் போவோம்...''

வைஜயந்தியால் அவரின் பிடிவாதத்தை மாற்ற முடியவில்லை. எப்படியாவது வீட்டுக்குப் போய்விட்டால் போதுமென்ற அவமானப் பிடுங்கல் அவளுக்கு.

நிறை மாதத்தில் இப்படியெல்லாம் ஏன் ஆசை ஏற்பட்டதோ என்று தன்னைத் தானே அவள் தூஷித்துக் கொண்டாள்.

அவருக்குப் பாதுகாவலாக அவள் பக்கத்திலேயே முன் சீட்டில் அமர்ந்தாள்.

சுந்தரேசன் டிரைவ் செய்தார்.

சாலையின் இருபுறமும் வளைந்து வளைந்து, தடுமாற்றத்தோடு மேலும் கீழும், பக்கவாட்டிலுமாக ஆடியபடி அவர்களின் கார் ஓடிக் கொண்டிருந்ததைப் போய் எதிர்ப்பட்டோரும் எச்சரிக்கையோடு ஒதுங்கிக் கொண்டிருந்தார்கள்.

இல்லையென்றால்... சாலையில் பிணக் குவியல்தான்.

ஒரு சாலைத் திருப்பம்.

ஓரமாக ஆழமான கழிவு நீர்க் கால்வாய்.

சுந்தரேசனின் நிலை தடுமாறியது. கை தடுமாறியது. கால் தடுமாறியது. காரின் சக்கரமும் தடுமாறியது!

வைஜயந்தி 'வீல்' எனக் கத்தினாள். கண்களை இறுக மூடிக் கொண்டாள்.

காரின் சக்கரம் கால்வாயில் விழுந்து, குப்புறச் சாய்ந்தது.

சுந்தரேசன் தூக்கி எறியப்பட்டார்...வைஜயந்தி காருக்குள்ளேயே குலுங்கி விழுந்தாள்.

இரவுதான் என்றாலும் நடமாட்டமான சாலை.

சற்று நேரத்தில் அவர்களைச் சுமந்து கொண்டு 'ஆம்புலன்ஸ்' கார் வைத்தியசாலையுள் நுழைந்தது.



படுக்கையிலிருந்து சுந்தரேசன் எழுந்து உட்கார்ந்தார்.

நர்ஸ் அவரைப் படுத்துக்கொண்டு ஓய்வு எடுக்கச் சொன்னதையும் அவர் கேட்கவில்லை.

''ஸிஸ்டர்! என்னைத் தயவுசெய்து போக விடுங்கள். என் மனைவி வைஜயந்தியைப் பார்த்தாகணும். நிறைமாதக் கர்ப்பிணியான அவளும் என்னால் ஏற்படுத்தப்பட்ட விபத்தில் சிக்கியவள்தானே! அவள் எப்படி இருக்கிறாள் என்று பார்க்க விடுங்க....''

எழுந்த சுந்தரேசனின் கையைப் பிடித்து இழுத்துப் படுக்க வைத்தாள் நர்ஸ்.

''கொஞ்சம் அமைதியாய் இருங்க! உங்க மனைவிக்கு எந்தவித ஆபத்தும் ஏற்படவில்லை. அவங்களும் மூன்று நாளா மயக்க நிலையிலேயே இருந்தாங்க. இரண்டு மணிக்கு முன்னாடிதான் அவர்களுக்கும் மயக்கம் தெளிந்தது! இப்போ வயிற்று வலி ஏற்பட்டிருக்கு. டாக்டரம்மா பெரு முயற்சி எடுத்துக்கிட்டிருக்காங்க. நல்லபடியா பிரசவம் ஆகிவிடும்...'' என்று சொல்லிக் கொண்டே, அவரது கட்டுக்களை அவிழ்த்து, புதிய மருந்திட்டு டிரஸ் செய்தாள்.

''ஸிஸ்டர்! என் நிலை எனக்கு நன்றாகப் புரிகிறது. என் மன நிலை தெளிந்து விட்டதை நான் நன்றாக உணர்கிறேன். தயவு செய்து வைஜயந்தியைப் பார்க்க அனுமதியுங்கள்.'' சுந்தரேசனின் கண்களில் நீர் பனித்தது.

நர்ஸ் அவருக்குக் கைத்தாங்கல் கொடுத்து அழைத்துச் சென்றாள்.

பிரசவ வார்டுக்கு அருகில் நெருங்கிய போது ஜனித்த ஒரு குழந்தையின் அழுகை ஒலி பீறிட்டு வந்தது.

வாயிலோரம் வந்து நின்று, மனத்தைப் பக்குவப்படுத்த முயன்று கொண்டிருக்கும் சுந்தரேசனின் முகத்தை; பிரசவ அறையிலிருந்து வெளிவந்த டாக்டரம்மா பார்த்து விட்டார்.

''மிஸ்டர், சுந்தரேசன்! சந்தோஷச் செய்தி! உங்களுக்குப் பையன் பிறந்திருக்கிறான். வழக்கமாக எல்லாப் பிள்ளைகளைப் போலத்தான் அவனும் அழுகிறான் என்றாலும் எனக்கு அப்படித் தோன்றவில்லை. உங்களுக்காக — உங்களின் மன நிலைக்காக — நீங்கள் நடத்திய வாழ்க்கைக்காக அவன் அழுகிறான் என்றே எண்ணுகிறேன். அவனை அழ விடாதீர்கள். இதுதான் என் வேண்டுகோள்...''

டாக்டரம்மாவின் வார்த்தை, சுந்தரேசனின் இதயத்தைச் சுட்டது! வீணாகக் கழித்த வாழ்வின் காலத்தை — அந்த இரவில் நடந்த சம்பவங்களை அந்தச் சூடு பொசுக்கியது.

''டாக்டரம்மா! எங்கள் குழந்தையை அழ விடமாட்டேன். நீர் மேல் எழுத்தாக என் வார்த்தையை எண்ணாதீர்கள். என் இதயத்தில் இரத்த வடுக்களால் எழுதப்பட்ட வார்த்தைகள் அவை....'' என்று சொல்லிக் கொண்டே அந்த அறையுள் நுழைந்து வைஜயந்தியைப் பார்த்தார்.

அவள்... அவரின் வார்த்தைகளை மனனம் செய்வது போல் அமைதியாய், வெட்கித்து இருந்தாள்.

---



'' காமாட்சி! இந்த அக்கிரமத்தைப் பாரேன்! கிருதாவுக்கே மாப்பிள்ளை இரண்டு கிலோ எண்ணெயைத் தீர்த்துட்டார்!''

'' இதென்ன மாமா! இப்படிச் செய்துட்டீங்க, திருஷ்டிப் பூசனிக்காயில்...?''

'' யாருக்குத் தலை தீபாவளி யென்று நாலு பேருக்குத் தெரிய வேண்டாமா?''



# ரெம்கோவின் ஜோதி வெள்ளத்தில் நீந்தித் திளையுங்கள்!

தேர்ந்தெடுக்க
உன்னதமான
4 ரேடியோக்கள்...



REMCO கெய்ஷா

(வரிகள் தனி)



அனுராக்





REMCO

மாடல் ஆர்டி-828

(வரிகள் தனி)

## ரெம்கோ ரேடியோக்கள்

ஒலி நயத்தில்
புதுமையைப் புகுத்துபவை.

ரேடியோ அண்ட் எலக்ட்ரிகல்ஸ்
மேன்யூஃபேக்சரிங் கோ லிட்.,
மைசூர் ரோடு, பெங்களூர்



# சில மனிதர்கள் - சில நினைவுகள்

எப்படியோ உயர்நிலைப் பள்ளியில் மூன்று ஆண்டுகளைக் கழித்தாயிற்று. கிராமத்திலிருந்து பள்ளிக்கூடம் இருந்த நகரத்துக்குப் பாதி நாட்கள் நடந்தும், மீதி நாட்களில் பாரவண்டிகளில் கெஞ்சிக் கூத்தாடி இலவச சவாரி செய்தும் அந்தச் சிறுவன் போவான். தெரு விளக்குகளின் ஒளியில் தன் பாடங்களை அவ்வப்போது படித்துக் கொண்டும் வந்தான்.

பள்ளி இறுதிப் பரீட்சைக்குப் பதினைந்து ரூபாய் பணம் கட்ட வேண்டும். சிறுவனிடம் அந்தப் பணம் இல்லை. தன் வீட்டிலும் பணம் இருக்காது என்று அவனுக்குத் தெரியும். ஆனாலும் தன் தாயார் எப்படியும் இந்த இக்கட்டிலிருந்து தன்னைக் காப்பாற்றுவாள் என்ற நம்பிக்கை உண்டு.



உ. வே. சாமிநாதய்யர்

அன்னை, வீட்டில் வெகு நாட்களாக உபயோகத்திலிருந்த வெந்நீர்ப் பானையை மறு நாளே பதினைந்து ரூபாய்க்கு விற்றுப் பணத்தைப் பையனிடம் கொடுத்தாள். ''மகனே! பிற்காலத்தில் நீ பெரியவனாகும்போது நமது இந்த நிலையை மறந்து விடாதே'' என்று புத்திமதியும் சொன்னாள்.

தன் பையன் பிற்காலத்தில் பாரத நாடு முழுவதிலும் புகழ் பெற்றுப் பிரகாசிக்கும் சர் எம். விசுவேசுவரய்யா ஆவான் என்று அந்தத் தாய்க்கு அப்போது தெரிந்திருக்க நியாயமில்லை.

தமிழ்த் தாத்தா டாக்டர் சாமிநாதய்யரிடம் இ.வா.ஜ. அவர்களை அறிமுகப்படுத்தி



எம். விசுவேசுவரய்யா

வைத்தது 'ஆடவர் நகையுற ஆண்மை மாசுற' என்று ஆரம்பிக்கும் கம்ப ராமாயணப் பாடலே! 1926ம் ஆண்டில் சிதம்பரத்தில் வசித்து வந்த தமிழ்த் தாத்தாவைப் பார்க்க இளைஞர் இ. வா. ஜ.வும் மற்றும் சில நண்பர்களும் சென்றிருந்தார்கள். அதுதான் முதல் சந்திப்பு. ''நீர் படித்த பாடல்களில் ஒன்றைச் சொல்லும்'' என்று பெரியவர் கூறியதும் இ. வா. ஜ. இந்தப் பாடலைத்தான் சொன்னார். அதோடு நிற்காமல் 'ஆடவர்' என்ற பதத்தை 'ஆள்', 'தவர்' என்றும் பிரித்து இரு பொருள்படக் கூறினார்.

பெரியவருக்கு மிக்க மகிழ்ச்சி. ''மகாராஜாக்கள் வாழ்ந்த காலத்தில் இப்படி அருமையாகப் பொருள் சொல்பவர்களைக் கண்டால் வெகுவாகக் கௌரவிப்பர்'' என்று கூறிப் பாராட்டினார்.

ஜஸன்ஹோவர்



அமெரிக்க ஜனாதிபதியாக இருந்த ஐசன்ஹோவர் எப்போதுமே அதிருஷ்டக்காரர். இரண்டாவது உலக யுத்தத்தின்போது ஐரோப்பிய நாடுகளில் அவர் போர்க்களத்தில் ஜெனரலாகப் பணியாற்றுகையில் ஜெர்மானியர்கள் அவரைத் தீர்த்துக் கட்டத் திட்டமிட்டார்கள். அதற்காக உளவாளிகள் அவருடைய போக்குவரத்து விவரங்களையெல்லாம் கண்காணித்து ஒருநாளைத் தேர்ந்தெடுத்தார்கள். அவர் கார் போகும் வழியில் மறைந்திருந்து குண்டு வைத்துத் தாக்க ஏற்பாடாகியிருந்தது.

அந்தக் குறிப்பிட்ட இடத்தை அணுகுவதற்கு முன்னாலேயே ஐசன்ஹோவர் வழியில் ஒரு வயோதிகரையும், அவர் மனைவியையும் பாதையில் பார்த்தார். முதுமையினால் தள்ளாடி நடந்து கொண்டிருந்த அவர்களுக்கு உதவி செய்ய விரும்பினார். அவர்களைத் தம் காரில் ஏற்றிக்கொண்டு, கிளைப் பாதை ஒன்றின் வழியாக அவர்கள் கிராமத்தில் கொண்டுபோய்ச் சேர்த்து விட்டுத் தம் முகாமுக்கு வேறு வழியாகப் போய்ச் சேர்ந்தார். ஆனால் அவர் படையைச் சேர்ந்த வேறு ஒரு கார் பின்னாலேயே வந்தது. அது வழக்கமான பாதையிலேயே சென்றது. அந்தக் காரை எதிரிகள் தகர்த்தார்கள். ஐசன்ஹோவர் எதிர்பாராத விதமாகத் தப்பிவிட அந்த முதியவர்கள் துணை செய்தார்கள்.

— மேரு

உறையுள் உறங்கும் வாத்தியத்தைத் துயரத்தோடு பார்த்தார், பிள்ளை.

கூடத்தின் தென் கிழக்கே பழுப்பேறிப் போன இரு சுவர்கள் கூடும் மூலையில் கறுப்பு நிற மரப் பெட்டியின் மேல் கொடி மரம் நட்டாற்போல் நிறுத்தி வைத்த வாத்தியம். உறையின் உச்சியில் சுருக்குத் தையல் போட்ட வாய் இறுக மூடி முடிச்சுப் போடப்பட்டிருந்தது. காக்கி நிற உறை; ஆனால் ஜன்னல் வழியாக உட்புகும் செம்மண் தெருப்புழுதி மேலே படிந்து படிந்து அதன் நிறம் ஒரு மாதிரி காவியாக மாறி விட்டிருந்தது.

வாத்தியத்தைப் போன ஆயுத பூஜைக்கு வெளியே எடுத்ததுதான். அதுவும் வெறும் பூஜைக்காகத்தான். அதற்கப்புறம் வேலை வரவில்லை.

'பூசைக்குப் பூசைதான் இனிமே இதை வெளியே எடுக்கணும் போல' என்று விரக்தியாகச் சிரித்துக் கொண்டார் பிள்ளை.

இனிமேல் அவர் உறைக்குள்ளே இருக்கிற நாதசுரத்தை வெளியே எடுத்து வாசிக்க மாட்டார். முடியாது என்பதல்ல; 'கூடாது' என்று வைத்தியர்கள் சொல்லி விட்டார்கள். பிள்ளை கண்டிப்புக்குப் பெயர் எடுத்தவர் தான். ஆனால் வைத்தியர்கள் கண்டிப்பில் அவரையும்விட ஒரு படி மேலே போய் வாத்தியத்தை அவர் கையிலிருந்து பிடுங்கி மூலையில் சாத்தி விட்டார்கள்!

ஒரு நாள் அவருக்கு இடப்புற மார்பினுள் துரட்டுக் கோலைப் போட்டுத் திருகித் திருகி இழுக்கிற மாதிரி வலித்தது. திடீரென்று உலகில் சுவாசிக்கக் காற்றே இல்லாது சூனியமடைந்துவிட்டாற்போல் பிரமை தட்டியது. கழுத்தைச் சுற்றிப் போட்ட மேல் துண்டு தான் தொண்டையை இறுக்கி மார்பினுள் மூச்சைத் திணறடிக்கிறதோ என்று சந்தேகப்பட்டார். ஆனால் அந்தத் துண்டு அவர் மடிமீதுதான் கிடந்தது.

கடைசியாக அன்று வாசித்ததுதான். அதற்கப்புறம் அவர் ஏறத்தாழ ஒரு மாதம் படுக்கையில் கிடந்தார். இங்கிலீஷ் வைத்தியம் வேண்டாம் என்று பிடிவாதம் செய்து பார்த்தார்; நடக்கவில்லை. ஊசியும் மாத்திரைகளுமாக வைத்தியம் இன்னும் தொடர்ந்து நடந்து கொண்டுதானிருக்கிறது.

வாத்தியத்தை வெளியே எடுத்து ஓர் அரை மணி நேரமாவது மனதார வாசிக்க வேண்டும் என்று அடிக்கடி எழும் ஆசை வெறியாக மாறிக் கொண்டு வருவதையும் அவரால் உணர்ந்து கொள்ள முடிந்தது.

ஆவேசம் வந்து என்றைக்கு அதை வெளியில் எடுத்து மூர்க்கத்தனமாக ஊதப் போகிறாரோ...?

'விட்டுப்பிடலாந்தான், சரிதான் கதை முடிஞ்சது போ'ன்னு இருந்துப்புடலாம். எம் பேரைச் சொல்லி வாசிக்கிறதுக்கு ஒரு பய இருந்தால் அவன் வாசிப்பைக் கேக்குறதிலேயே மனசைத் தேத்திக்கலாம். ஆனா அதுக்குந்தான் வழியில்லாமப் பண்ணிட்டியே நட



ராசா' என்று அப்படி உணரும்போதெல்லாம் மனம் வெதும்புவார் பிள்ளை.

அவர் தந்தை வழியில் மட்டுமின்றித் தாய் வழியிலும் வாழையடிவாழையாகச் சிதம்பர வாசி. ஆகவே வாய்க்கு வாய் 'நடராசா' தான். இப்போது அவர் அங்கு வசித்து வருகிற ஓடு வேய்ந்த வீடு அவருடைய முன்னோர் வைத்துவிட்டுப் போனதுதான். அவராகச் சொத்து ஏதும் தேடிக்கொள்ளவில்லை.

பிடிவாதம், கண்டிப்பு போன்ற பிறவியிலிருந்தே தொத்திக் கொண்டு வந்த சுபாவங்களும் அவரைப் பிறர் அண்டவொட்டாமல் செய்துவிட்டன. தமக்கு முன்னால் உட்கார்ந்து கொண்டு தைரியமாகத் தப்புத் தாளம் போடுகிறவன் தேசத்தின் சக்கரவர்த்தியாகவே இருந்தாலும், கையில் இருக்கிற குழலைத் திருப்பி அவன் கிரீடத்தில் ஒன்று போட்டு விடுகிற அளவுக்குத் துணிச்சலும், கோபாவேசமும் மிகுந்த நாத உபாசகர் அவர்....

வாசிப்பில் சிறு பிழை நேர்ந்தாலும் பொறுமையின்றி மிகக் கொடூரமாகத் தண்டித்துவிடும் அவரது இயல்பின் காரணமாக அவரிடம் சிட்சைக்கு வந்தவர்கள் மிகக் குறைவாகத்தான் இருந்தார்கள்.

தம் பெயரைச் சொல்லி வாசிக்க ஒரு பயலும் இல்லையே என்று அவர் ஏங்கினார் தான். ஆனால், 'சிதம்பரம் நாகலிங்கம் பிள்ளை சிட்சை' என்று எவனும் தன் கால்களுக்குப் பூப்போட வேண்டும் என்று அவர் எதிர்பார்க்கவில்லை. தம் வம்சத்தின் பெயர் தெரியாத ஆதிக் கலைஞன் நாள் முதலாய், பரம்பரை பரம்பரையாக வந்து கொண்டிருக்கிற வித்தையின் ஒரு சிறு பின்னமாவது தமக்குப் பிறகு வரும் தலைமுறைகளிலும் இழையோடிக் கொண்டிருக்க வேண்டும் என்றுதான் அவர் விரும்பினார்.

அதற்கு ஒரு வாய்ப்புக் கிடைக்காமலும் போய்விடவில்லை. வெளியிலிருந்து ஒரு சீடன் வந்து சரணடைவதைக் காட்டிலும் மேலாக அவரிடம் பாடம் கேட்க அவருக்கே ஒரு பையன் காலம் தப்பிப் பிறந்தான். எதிர்காலம் பிரகாசமாக இருக்கும் என்பதற்கான அறிகுறிகள் எட்டு வயதிலேயே அவனிடம் புலப்பட்டன. நினைவு தெரியத் தொடங்கு முன்பே தந்தையின் வாசிப்பில் அவன் லயிக்கத் தொடங்கி யிருந்தான். நாகலிங்கம் பிள்ளைக்கு அவசரம்; தகுந்த பிராயம் வரு முன்னரே முறைப்படி அவனுக்குச் சிட்சையை ஆரம்பித்து விட்டார்.

அவர் அதிசயித்துச் சமைந்து போகுமளவுக்குப் பையன் வித்தையில் தேறிக்கொண்டு வந்தான். 'தாயின் வயிற்றிருட்டில் உறங்குகிறபோதே எனது வாசிப்பைக் கேட்டுக் கேட்டு அதில் ஊறி உருவாகி யிருக்கிறானோ?' என்று சில சமயங்களில் அவர் தமக்குள் பிரமித்துப் போகிற மாதிரி அவன் அவரது பாணியில் லாகவமாக நடை பயிலத் தொடங்கி விட்டான். ஆனால் நாகலிங்கம் பிள்ளைக்குக் கொடுத்து வைக்கவில்லை. பிறந்த ஐந்தாம் வருடமே தாயை இழந்த பையனுக்கு அந்தத் தாயின் எஞ்சிய ஆயுளும் வந்து சேரும் என்ற அர்த்தமற்றதொரு நம்பிக்கை அவருக்கு இருந்தது. ஆயினும்,



நடப்பு அந்த நம்பிக்கைக்கு நேர் எதிரிடையாக அமைந்துவிட்டது.

'தாயில்லாத பிள்ளை தறி கெட்டுப்போய் விடக் கூடாது. வீட்டில் விளக்கு ஏற்றி வைக்கவும் ஓர் ஆள் தேவை' என்று பையனுக்குச் சிறு வயதிலேயே திருமணம் செய்து வைத்துவிட்டார் பிள்ளை. அடுத்த ஆண்டே அவருக்குப் பேரன் பிறந்து விட்டான்.

பேரனுக்கு ஒரு வயதாகியிருந்தபோது ஆடிப் பதினெட்டாம் பெருக்குக்குக் கட்டுச் சோறு சாப்பிடப் பையனும் பெண்ணுமாகக் குழந்தையுடன் கொள்ளிடத்துக்குப் போனார்கள்.

ஆனால் திரும்பி வந்தது மருமகப் பெண்ணும் பேரனும்தான்.

பிள்ளை அதிர்ந்து போய்விட்டார். ஒற்றை மாட்டு வண்டியில் மயங்கிய நிலையில் துவளத் துவள வந்து இறங்கின நாட்டுப் பெண்ணையும், ஓர் அந்நியன் கையில் அழுதழுது ஓய்ந்து போன பேரக் குழந்தையையும் பார்த்து விக்கித்து நின்றார்.

புதுவெள்ளத்தில் நீச்சலடிக்கப் போன அவருடைய மகன் திரும்பக் கரையேறவில்லையென்று அவ்விருவரையும் கொண்டு வந்து சேர்த்தவர்கள் கூறிய செய்தியை அவரால் நம்ப முடியவில்லை. எப்படியும் மகன் திரும்பி வந்து விடுவான் என்று நிச்சயமாக நம்பினார்.

ஒரு நாள், ஒரு வாரம், ஒரு மாதம்...

அணைக்கரையில் அவனது உடல் ஒதுங்கியதாகக்கூடத் தகவல் எட்டவில்லை.

பிள்ளை இப்போது பேரனை எதிர்பார்க்கத் தொடங்கினார். உட்கார்ந்த குழந்தை முக்காலியைப் பிடித்துக் கொண்டு எழுந்து நின்று தத்தித் தத்தி நடைபழக ஆரம்பித்துத் தன் வளர்ச்சிக்குப் படிப்படியாக எடுத்துக் கொண்ட அவகாசத்தைக்கூட அவரால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. எங்கோ பயணம் புறப்பட்டவர் போல அவசரப்பட்டார். சிசு வெளியேறும் வேளைக்காகக் காத்துக் கொண்டிருக்கிற நிறைமாத சூலி மாதிரி தவித்தார்.

கண்ணப்பா விவரம் தெரிந்த பையனாக வளர ஆரம்பித்த பிறகுதான் பேரனுக்கும் மகனுக்கும் உள்ள வித்தியாசம் பிள்ளைக்குப் புலனாயிற்று.

இசையில் ஈடுபாடு அந்தக் குலத்துக்கே வாய்க்கின்ற வரப்பிரசாதம். கண்ணப்பாவுக்கும் அந்த வரப்பிரசாதம் கிட்டியிருந்தது. ஆனால் அந்த இசையில் தேர்ச்சி பெறுவதில் பாட்டனுக்கு இருந்த பக்தி ஆவேசத்தையோ தகப்பனுக்கிருந்த பணிவையோ அவனிடம் காண இயலவில்லை. இசையை ஒரு விளையாட்டாக அவன் அனுபவித்ததே நாகலிங்கம் பிள்ளையைத் துணுக்குறச் செய்தது. தவளையை மல்லாக்கப் போட்டு அறுத்துப் பார்க்கிற மாதிரி அவன் ராகங்களை அலசி ஆராயத் தொடங்கியதை அவரால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. வித்தையை சம்பூர்ணமாகக் கற்றுத் தேறுவதற்கு முன் அவன் ஏதோ பெரிய மேதாவியைப் போல் ராகங்களைப் பற்றித் தர்க்கம் பண்ணத் தொடங்குவதை அவரால் சகித்துக் கொள்ள இயலவில்லை.

வரம்பு முறைகளைக் கடந்து புதிது புதிதாக ராகங்களை உண்டுபண்ணுகிறவன் மாதிரி அவன் தன்னிச்சையாக வாத்தியத்தைக் கையாளத் தொடங்கியபோது பிள்ளை ருத்ர மூர்த்தியானார்.

"ஏலே, இப்ப வேண்டியது சாகித்தியம் இல்லேடா, சாதகம்! மொதல்லே கொழம்பும் சோறு ஒழுங்காத் தின்னு ஆவட்டும். அப்பால மோருக்குப் போவலாம்" என்று அப்போதெல்லாம் பிள்ளை கையை ஆட்டி ஆட்டிக் கொண்டு ஆங்காரமாகக் கூவுவார்.

கண்ணப்பா அதற்குப் பதில் சொல்லாமல் சத்தமின்றிச் சிரிப்பான்.

கண்ணப்பா சாதகம் செய்யாமல் இல்லை. தாத்தாவின் எதிரே அமர்ந்து அவர் வாசித்துக் காட்டுகிற மாதிரி அவன் வாசிக்க முயலாமல் இல்லை. ஆனால் வாத்தியத்தை வாயில் வைத்ததுமே அவனுக்கே ஏன் என்று தெரியாத ஒரு வேகம் கட்டவிழ்த்துக் கொண்டது.

வித்தையில் தேர்ச்சி பெற எல்லோரையும் போல் அடி மேல் அடி வைத்து நத்தையாக ஊர்ந்து கொண்டு போக அவனுக்குப் பொறுமை இருக்கவில்லை. மேலும் பாட்டன் சொல்லிக் கொடுத்தாற் போல் அவன் ஊத ஆரம்பிக்கிறபோதெல்லாம் அவனுக்குள்ளேயிருந்து ஏதோ ஒன்று 'இப்படி வேண்டாம்; அப்படி வாசித்துப் பார்' என்று தூண்டிவிட்டுக் கொண்டிருந்தது.

பிறவியிலேயே இசை ஞானம் தன்னுடன் ஐக்கியப் பட்டிருக்கிறதென்று கண்ணப்பாவுக்குத் தோன்றியது. ஆகையால் எல்லா மாணவர்களையும் போல் தானும் பாடம் பாடமாகத் தத்திக் கொண்டு போகத் தேவையில்லை என்று அதிகப்பிரசங்கித்தனமாக நினைத்தான். தன் மேதையைத் தாத்தா உணரவில்லை. உணர்ந்தாலும் அதை அவர் அங்கீகரிக்க மாட்டார் என்று தோன்றிய போது அதற்காக அவரை அவன் வெறுக்கவும் தொடங்கினான்.

பிள்ளை மனம் உடைந்து போய்விட்டார். இவன் உருப்படப் போவதில்லை என்று அவருக்கு நிச்சயமாகி விட்டது.

ஒரு நாள் வெள்ளி மறைகிற அதிகாலை வேளையில் பிள்ளை நப்பாசையுடன் பேரனை எதிரே உட்கார்த்தி வைத்துக் கொண்டு, அடாணாவை முறைப்படி வாசித்துக் காட்டினார். பிறகு பேரன் வாசிக்க ஆரம்பித்தான். ஆனால் அவன் வாசிப்பு வேறுவிதமாக இருந்தது. அவனுக்கு அவரும், அவருக்கு அவருடைய தந்தையும் கற்பித்த பாணியை எடுத்த எடுப்பிலேயே தூக்கி எறிந்துவிட்டு அவன் பட்சி மாதிரி தன்னிச்சையாகக் கிளம்பிவிட்டாற் போலிருந்தது.

பிள்ளை முரட்டுத்தனமாக இடைமறித்தார்.

"ஏலே, இது உனக்குச் சரிப்படாது... போதும். இதோட விட்டுரு. எங்கியான காப்பிக் கௌப்பிலே அடுப்பூதப் போடாலே" என்று ஓர் உறுமல் உறுமிவிட்டு 'விருட்'டென்று அங்கிருந்து எழுந்து கொல்லைப்புறம் நோக்கி விரைந்தார்.

கண்ணப்பா ரோசத்தோடு வாத்தியத்தைக் கீழே வைத்துவிட்டு வெளியே போனான்.

அன்றைக்குப் போனவன்தான். ஐந்து வருடங்கள் வரையில் தகவலே இல்லை. எங்கே போனான், என்ன ஆனான் என்று எதுவுமே தெரியவில்லை.

கொண்டவனைக் கொள்ளிடத்துக்குக் கொடுத்தபின் பேரனையும் உயிரோடு பறி கொடுத்துவிட்டு வீட்டோடு முடங்கிக்

கிடக்கிற நாட்டுப் பெண்ணின் புலம்பலைப் பிள்ளையால் சகித்துக் கொள்ள முடியவில்லை.

ஒரு மனசாட்சியுள்ள குற்றவாளியாகப் பிள்ளை தவித்தார். அந்த அவஸ்தையே அவரைப் பாதி ஆளாக்கி விட்டது.

கிணற்றில் போட்ட கல் மாதிரி ஐந்தாண்டுகள் கழிந்தான பிறகு கண்ணப்பாவைப் பற்றிய தகவல்கள் காதில் விழ ஆரம்பித்தன. பட்டணத்தில் பிள்ளையாண்டான் தலையெடுத்து விட்டானாம். அதென்னவோ 'கிளாரினெட்' வாசிக்கிறார்கள். அந்தக் 'கிளாரினெட்'கூட எல்லாரும் வழக்கமாக வைத்துக் கொண்டிருக்கிற 'கிளாரினெட்' மாதிரி இல்லையாம். தனக்காக ஒரு புது விதமாக நாதம் கிளம்புகிற மாதிரி அவனாகவே ஆலோசனை சொல்லித் தயாரித்து வைத்துக் கொண்டிருக்கிறான் என்று கேள்விப்பட்டவர்கள் சொன்னார்கள். கச்சேரி செய்கிறானாம்... நல்ல கூட்டம் சேர்கிற கச்சேரிகள்! சினிமாவிலே கூட வாசிக்கக் கூப்பிடுகிறார்களாம். சினிமா, கச்சேரி எல்லாவற்றிலுமே சுயமாகப் போட்டுக் கொண்ட மெட்டுக்களை வாசிக்கிறான் என்கிறார்கள்.

திடீரென்று ஒரு நாள் கண்ணப்பாவே குதிரை வண்டியில் வீட்டு வாசலில் வந்து இறங்கினான். ஆளைப் பார்த்தால் சங்கீதத்தை வைத்துப் பிழைக்கிறவனாகத் தெரியவில்லை. கல்லூரி போகிற பையன் மாதிரி ஒட்ட ஒட்டக் குழாயும் தொள தொள வென்று நீண்டு தொங்குகிற சட்டையுமாக வந்து நின்றான். தலை முடியை நீளமாக வளர்த்துப் பெண்பிள்ளை மாதிரி நடுவகிடு எடுத்துச் சிரசின் இடமும் வலமும் படியப் படியச் சரிய வாரிவிட்டுக் கொண்டு மேலு தட்டுக்கு மேலே கட்டையாக நீண்டு இரு முனைகளிலும் சன்னமாகக் கீழ் நோக்கி இறங்குகிற மீசையுடன் ஆள் அடையாளமே தெரியாதபடி மாறிப் போயிருந்தான். அவனுக்குப் பின்னால் வண்டியிலிருந்து தோல் பெட்டி, பழக் கூடை, இன்னும் என்னென்னவெல்லாமோ இறங்கி வீட்டுக்குள் வந்தன.

பேரன் என்றாவது ஒரு நாள் மனம் திருந்தி வீடு திரும்புவான் என்றுதான் பிள்ளை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். ஆனால் அவனோ முன்னிலும் உருமாறி, மீண்டும் பழைய பாணிக்குத் திரும்பவே முடியாத அளவுக்குத் தன்னை மாற்றியமைத்துக் கொண்டு திரும்பியிருந்தான்.

பிள்ளை சம்பிரதாயத்துக்காக ஒரு முறை 'வா' என்று அவனை வரவேற்றவர்தான். அதன் பிறகு அவருக்கு என்ன, ஏது என்று கூட அவனிடம் விசாரிக்கத் தோன்றவில்லை.

அன்றிரவே கண்ணப்பா தான் வந்த நோக்கத்தை வெளிப்படுத்திவிட்டான்.

''தாத்தா! பட்டணத்திலே எல்லாம் நல்லபடியா இருக்கு. நீங்களும் அம்மாவும் என்கூடவே வந்து இருந்துடணும்...''

பிள்ளை கோபத்தை அடக்கிக் கொண்டு பதிலிறுத்தார்:

''நா எதுக்கு? உங்கம்மா வர்றாளா கேளு. சரின்னா அழைச்சுக்கிட்டுப் போ.''

கண்ணப்பா மேலும் மன்றாடிப் பார்த்தான். ஆனால் பிள்ளை மசியவில்லை. கடைசியில் அவன் தன் தாயை மட்டும்தான் அழைத்துக் கொண்டு போக முடிந்தது.



டிரைவ்-இன் ஓட்டலில் காதலர்கள் சாப்பிட்டுக் கொண்டிருந்தனர்.

காதலி: ஏன் உங்கள் முகம் சோகமாக ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருக்கிறது? நம் திருமணத்துக்கு உங்க அப்பா சம்மதிக்க மாட்டாரா?

காதலன்: என் கவலையெல்லாம் அதோ மேலே இருக்கிறதே, காக்காய். அதைப் பற்றித்தான்!

- நெடுமிடல்

தாயை அழைத்துக் கொண்டு கண்ணப்பா போய்ச் சேர்ந்த பிறகு பிள்ளை தனியாளாகவே வாழ்ந்தார். இடப்புற மார்பைத் துரட்டுக் கோலால் திருகி எடுக்கிற வலி வருகிறவரைக்கும் அவர் தனியாகத்தான் இருந்தார். அதற்கப்புறம் ஒத்தாசைக்கு ஆள் துணை இன்றியமையாததாகி விட்டது. தங்கை முறையாக வேண்டிய தூரத்து உறவுக்கார விதவை ஒருத்தியை வரவழைத்துக் கொண்டார். — செங்கமலம்.

அவள்தான் இப்போது அவரை ஒரு தாதி மாதிரி போஷித்து வருகிறாள்.

பிள்ளை படுக்கையில் விழுந்த செய்தி அறிந்ததும் கண்ணப்பா தாயையும் அழைத்துக்கொண்டு பதறியோடி வந்தான்.

''சொல்றதைக் கேளுங்க தாத்தா... பட்டணத்திலே நல்லா வைத்தியம் பார்த்துக்க வசதி இருக்கு. கூட நாங்களும் இருக்கிறோம். ஒரேயடியா வந்து இருக்காமப் போனாலும் பரவாயில்லை; கொஞ்ச நாளைக்காச்சும் வந்திருந்து ஒடம்பைத் தேத்திக்கிட்டுப் போகலாம் தாத்தா...''

ஆனால் பிள்ளை இப்போதும் பிடிவாதமாக மறுத்துவிட்டார். அவருக்கு உதவியாக அவன் தன் தாயை விட்டு விட்டுப் போகக் கூட அவர் அனுமதிக்கவில்லை. 'ஏற்கனவே தாயையும் பிள்ளையையும் பிரிச்சு வச்ச இருந்தது போதும். பின்னியும் அந்தப் பழி வர வேணும்...'

அந்த நாட்களில் கண்ணப்பாவின் பெயர் இன்னும் பிரபலமாகி விட்டிருந்தது. தனக்கென்று ஒரு கோஷ்டியையே சேர்த்துக் கொண்டு அவன் கச்சேரி பண்ணத் தொடங்கியிருந்தான். ரேடியோவில்கூட அவ்வப்போது அவனை வாசிக்கக் கூப்பிட்டார்கள். தனியாக ரிக்கார்டும் கொடுத்தான். சென்னையில் ஒரு பெரிய மேற்கத்திய பாணி கம்பெனியான ஹோட்டலில் வாரம் ஒரு முறை அவனை அழைத்து வாசிக்கச் சொல்லிக் கைநிறையப்

பணம் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். வடக்கே பெரிய நகரங்களுக்கு எல்லாம் போய் இசை நிகழ்ச்சி நடத்திவிட்டு வந்து கொண்டிருந்தான். எல்லாம் பிள்ளையின் காதில் விழுந்து கொண்டுதானிருந்தது.

பிள்ளைக்கு அவனது வாசிப்பைக் கேட்க வாய்ப்பு இல்லாமல் இல்லை. ஆனால் ஒரு தடவைகூட அவர் அதைக் கேட்டதில்லை; கேட்க விரும்பியதுமில்லை. அவன் வாசிப்பைப் பற்றிப் பிறர் சொல்லிக் கேட்கக் கேட்க அவருக்குக் கோபம்தான் பொத்துக் கொண்டு வந்தது.

''அட சரிதான், ஆளை விடு. இவந்தான் பெரிய ஞான சிகாமணியாட்டம்... இவன் என்ன வாசிக்கிறது, நான் என்ன கேழ்க்கிறது இடக்கான், அஸ்திவாரமில்லாத பய'' என்று கறுவுவார்.

''இம்ம்... அந்தப் பய மட்டும் ஒழுங்கா இருந்திருந்தா, இது இப்பிடி ஒறைக்குள்ளாறயே தூங்கிக்கிட்டா இருக்கும்?'' என்று சோகத்துடன் யோசித்தார் பிள்ளை.

''என்ன, வாத்தியத்தையே பார்த்துக்கிட்டு நிக்கறீங்க? கையி ஊறுதாக்கும்!''

பிள்ளை திடுக்கிட்டுக் குரல் வந்த திசையை நோக்கினார்.

அடுக்களை வாயிலில் நிலைப்படியின் மேலே ஒரு கையைத் தூக்கி வைத்துக் கொண்டு செங்கமலம் சிரித்தபடியே நின்றிருந்தாள்.

பிள்ளையும் சிரித்தார். ''கையும் வாயும் ஊறிக்கிட்டுத்தான் இருக்கு, செங்கமலம். ஆனால் பயப்படாதே. எடுத்து வாசிக்க மாட்டேன். அதுக்கெல்லாம் இப்ப தெம்பு இல்லேன்னு எனக்கே புரியுதே...'' என்றவாறு வாத்தியம் இருந்த மூலையை நோக்கி நடந்தார்.

அந்த நேரம் பார்த்து ஜன்னல் வழியாகத் தபால்காரர் வீசி எறிந்து விட்டுப் போன ஒரு கடிதம் அவர் காலடியில் வந்து விழுந்தது. குனிந்து அதை எடுத்தார்.

''செங்கமலம்! கண்ணாடியை எடுத்தா.''

அவள் கொண்டு வந்து கொடுத்த கண்ணாடியை மாட்டிக் கொண்டு கடிதத்தைப் பிரித்துப் பார்த்தார்.

கண்ணப்பாதான் எழுதியிருந்தான்.

'' நாளை மறுநாள் வெள்ளிக் கிழமை ஊருக்கு வருகிறேன். பெரிய வாண்டையார் வீட்டுக் கல்யாணத்தில் கச்சேரி செய்யக் கூப்பிட்டிருக்கிறார்கள். அம்மாவுக்கும் உடம்பு சரியாயில்லை. சாதாரணக் காய்ச்சல்தான். கவலைப்படும்படியாக ஒன்றுமில்லை. இருந்தாலும் அம்மாவை அழைத்து வரப் போவதில்லை. வெள்ளிக்கிழமை சாயங்காலம் கச்சேரி. காலையிலேயே அங்கு வந்துவிடுவேன். ஹோட்டலில் அறைக்கு ஏற்பாடு செய்திருக்கிறார்கள். கூட வருகிறவர்களை அங்கு தங்க வைத்துவிட்டு நேராக வீட்டுக்கு வருவேன். உங்களோடு இருந்த மாதிரி இருக்கும். நீங்கள் எப்படி இருக்கிறீர்கள்? உங்கள் உடம்பு தேறி வருகிறது என்றறிய ஆறுதலாக இருக்கிறது.''

அவ்வளவுதான் எழுதியிருந்தான்.

'பெரிய வாண்டையார் வீட்டுக் கச்சேரியா? 'வெளு வெளு' என்று இளக்காரமாகச் சிரித்துக் கொண்டார் பிள்ளை.

பெரிய வாண்டையார் வீடு அடுத்த தெருக் கோடியிலேதான். அவர் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் அவனது கச்சேரியைக் கேட்டுத் தீர வேண்டியிருக்கும்.

கல்யாணத்துக்காகப் பாதித் தெரு வரையில் பந்தல் போட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்று காய்கறி வாங்கப் போய்விட்டு வருகிற வழியில் பார்த்துவிட்டு வந்த செங்கமலம் சொன்னாள். முக்கியமாகக் கச்சேரிக்கென்று தான் அவ்வளவு பெரிய பந்தலாகப் போட்டுக் கொண்டிருக்கிறார்களாம்.

வெள்ளிக்கிழமை காலை கண்ணப்பா வந்து சேர்ந்தான். தாத்தாவிடம் அவரது உடல்நிலை பற்றி அக்கறையோடு விசாரித்தான். தாயைப் பற்றி அவருக்குச் சொன்னான். வெறும் சம்பிரதாயமான பேச்சுத்தான். தாத்தாவுக்கும் தனக்கும் பற்று எப்போதோ விட்டுப் போய்விட்டது என்பதை அவன் நன்கு அறிந்திருந்தான். தனது தொழிலைப் பற்றி, பொதுவாக சங்கீதத்தைப் பற்றி நீண்ட காலமாகவே அவன் தாத்தாவிடம் பேச்செடுத்ததில்லை. தன் வித்தையை அவர் அங்கீகரிக்கவில்லை யென்பதோடு, அதை அடியோடு வெறுத்தும் வருகிறார் என்பது அவனுக்குத் தெரியும்.

சாயங்காலம் ஏழு மணியானதும் கண்ணப்பா தாத்தாவிடம் சொல்லிக் கொண்டு கச்சேரி செய்யப் புறப்பட்டுப் போனான். அவன் செல்வதற்கு முன்பே பட்டாளம் பட்டாளமாக ஜனங்கள் அந்தத் தெருவை நோக்கிப் போய்க் கொண்டிருப்பதைப் பிள்ளை ஜன்னல் வழியாகப் பார்த்துக் கொண்டுதானிருந்தார். திருவிழாக் கூட்டம் போல் மக்கள் போவதைப் பார்க்கப் பார்க்க அவருக்கு எரிச்சல் பற்றிக் கொண்டு வந்தது. 'சை! புத்தி கெட்ட ஜனம்!' என்று அருவருப்புடன் சாபம் கொடுத்துவிட்டு ஜன்னல் பக்கம் பார்ப்பதைத் தவிர்த்தார்.

கண்ணப்பா புறப்பட்டுப் போன அரை மணி நேரத்துக்குப் பிறகு அதுவரை அவர் கேட்டே இராத வாத்திய ஒலிகள் அடுத்த தெருவிலிருந்து வர ஆரம்பித்தன. 'ஓஹோ, ஆரமிச்சுட்டான் போலே' என்று கேலியாகச் சிரித்துக் கொண்டார். அப்படி அவர் சிரித்துக்கொள்கிற போதே எல்லா ஒலிகளையும் மீறிக் கொண்டு ஒற்றையாய் ஒரு கிளாரினெட் நாதம் எம்பி எம்பிக் கொண்டு வந்தது. எதையோ தூண்டில் போட்டுச் சுண்டிச் சுண்டி இழுத்தது. 'அவன்தான் ஊதறான் போலிருக்கு' என்று சொல்லிக் கொண்டார்.

பேரன் பண்ணுகிற கச்சேரியைக் கேட்க அவர் சிறிதும் விரும்பவில்லை. ஆனால் விரும்பாத போதிலும் அதை அவர் கேட்டுக் கொண்டுதான் இருந்தார். முதலில் அர்த்தமின்றிச் சினம் பொங்கிப் பொங்கி வழிந்தது. அதன் பிறகு மனம் சற்று அடங்கி அந்த ஓசைகளை அலட்சியம் செய்ய முயன்றது. பிற்பாடு அந்தப் போக்கும் மாறி 'அப்படி என்னதான் ஊதறான் கேப்பமே' என்று நினைக்கத் தோன்றியது. மெல்லத் திண்ணைக்கு வந்து உட்கார்ந்து கொண்டார்.

'சீச்சீ' என்று அடிக்கடி முகத்தைச் சுளித்துக் கொண்டாலும், பேரன் வாசிப்பதை



பசியைப் பெருக்குவதோடு நின்றுவிடும் எந்த டானிக்கும் பாதிவேலையைத்தான் செய்யும்

*

# இன்க்ரிமின் பெறுவீர்..

## உண்ணும் மிகையான உணவை ஓங்கிய வளர்ச்சியாக மாற்றும்

*

சேருவீர் இன்க்ரிமின் இனத்தோடு...
வளர்ச்சிக்கான பசியைப் பெறுவீர் வளமுடனே !

பசியைப் பெருக்குவதோடு மட்டுமின்றி, உண்ணும் மிகையான உணவை ஓங்கிய வளர்ச்சியாக மாற்றுகிறது இன்க்ரிமின் டானிக். காரணம், உங்கள் குழந்தை சாப்பிடும் புரத சத்துக்களை மேம்படப் பயன்படுத்திக்கொள்ளும் அதிமுக்கியமான அமினோ அமிலம் அதில் அடங்கியுள்ளது.

பெரிய குழந்தைகளுக்கு இரும்புச்சத்து அடங்கிய ▶ இன்க்ரிமின் ஸிரப் — 175 மிலி & 57 மிலி. இளம் குழந்தைகளுக்கு இன்க்ரிமின் டிராப்ஸ் — 10 மிலி.






# * இன்க்ரிமின்

டானிக்

* அமெரிக்கன் ஸையனமிட் கம்பெனியின் ரிஜிஸ்டர்டு ட்ரேடு மார்க்.

Lederle

எல்லா மருந்துக்
கடைகளிலும் கிடைக்கும்.

விண்டாஸ்-INC. 21-140 TM

அவர் கேட்டுக் கொண்டுதா னிருந்தார். போகப் போக அந்த முகக் களிப்பு குறையத்தொடங்கியது. ஆரம்பத்தில் அசிரத்தையாக இருந்தவர் சிறிது நேரத்துக்கெல்லாம் சற்றுக் கவனமாகவே கேட்கலானார்.

எல்லா ஒலிகளுக்கும் மேலே நாகம் படமெடுத்தாற்போல் கண்ணப்பா தூக்கலாக எழுப்பிய ஜிளாரினெட் நாதம் கேட்டுக் கொண்டிருந்தது.

யுக யுகாந்திரங்களாக இருந்து வருகிற பந்தத்தை ஞாபகமூட்டி யாரையோ கெஞ்சிக் கெஞ்சிக் கூப்பிடுகிற மாதிரி அந்த நாதம் ஒலித்தது.

ஒரு மெட்டை அவன் திமர் திடீரென்று நீட்டியும் குறுக்கியும் அவசர அவசரமாகவும் வாசித்துக் கொண்டிருந்தபோது சட்டென்று அவருக்கு ஏதோ பொறி தட்டினாற்போல் இருந்தது. திடுக்கிட்டவர் மாதிரி மிரள மிரள விழித்தார். தமது வயோதிகத் தளர்ச்சியையும் பெரிய மனுஷத் தோரணையையும் முற்றிலும் இழந்தவராய்ச் சிறு பையன்போல் உற்சாகத்துடன் தொடைகளைத் தட்டிக் கொண்டு நிமிர்ந்து உட்கார்ந்தார். பிறகு முகம் மலர, "அட, இதுலியும் சங்கதி இருக்கய்யா!" என்று தம்மையும் மறந்தவராய்ச் சத்தம் போட்டுச் சொன்னார். அப்போது அவர் எதிரில் யாரும் இல்லை. ஆனாலும் யாரிடமோ வாதிடுவது போல் அவர் சற்று உரக்கவே பேசிக் கொண்டார்.

"வெளிக்கு ஏதோ காட்டுக் கூச்சலா இருந்தாலும் அதுக்கு உள்ளாற ஜீவநதியாட்டம் ஓடுதே. அது என்னய்யா? கதனகுதூகலந்தானேங்குறேன்? மேலுக்கு மாடிமேல்மாடியா கந்தரகோளம் பண்ணினாலும் அஸ்திவாரம் அந்தக் கதன குதூகலந்தானே.. வேற எது? அதுலியும் இந்தச் சுழிப்பு, இழுப்பு எல்லாப் பொடியிலேயும் எங்கப்பாரு முத்திரை முழுக்க முழுசாப் பளிச் பளிச்சங்குதே! இல்லேன்னுட முடியாதே!"

பிறகு, கண்ணப்பாவே தமக்கு எதிரில் நின்று கொண்டிருக்கிறான் எனப் பாவித்தவராய்:

"தம்பி, வெளியே நீ என்னதான் வேஷங் கட்டிக்கிட்டாலும் ஒனக்குத் தெரியாமயே ஒனக்கு உள்ளாற இருக்கற ஒன்னே ஒன்னுலே மாத்திக்க முடியாது. நீங்கள்ளாம் எந்த ரூபத்திலேதான் வாங்களேன்; ஒங்களை நாங்கள்ளாம் அடையாளம் கண்டுபிடிச்சிடுவோம் தெரிஞ்சுக்க. ஏன்னு, இந்த மண்ணோட வாகு அப்படீடா தம்பி. ஒனக்கு இப்பத் தெரியாது; எனக்கே இப்பத்தானே புரியுது.. இந்த மண்ணு எல்லாத்தையும் எடுத்துக்கும். எல்லாத்துக்கும் எடம் குடுக்கும்; இதுக்குன்னு எதுவுமே மிஞ்சாதோன்னு பயப்படற அளவுக்கு எல்லாம் இதை மூடி மறைச்சாலும் தன்னுது எதையும் இது விட்டுப்பிடாதுன்னு இப்பத்தான் எனக்கே புரியுது... இந்த மண்ணோட எது கலந்தாலும் கடைசி வரைக்கும் இதனோட சொந்த வாசனை இருந்துக்கிட்டுத்தான் இருக்கும். யாரு கண்டா, இப்ப நீ புதுசா வாசிக்கிறதுகூட நூற்றுக்கு நூறு இந்த மண்ணிலியே வௌஞ்சதாவும் இருக்கலாம். ஒன்னோட இன்னைய புதிசு மெய்யாலுமே முந்தாநாளையப் பழசா இருந்து அப்புறமா மெருகு ஏறியேறி நாளாவட்டத்திலே நேத்துப் பழசா உருமாறியிருந்தாலும் இருக்கலாம்; அப்ப இன்னைய புதுசும் பழசுதானே!"

அதன் பிறகு அவர் திண்ணையிலிருந்து தெம்போடு உள்ளே வந்தார். கூடத்தின் தென் கிழக்கே பழுப்பேறிய இரு சுவர்கள் கூடும் மூலையில் கறுப்பு மரப் பெட்டியின் மேல் உறையுள் உறங்கும் வாத்தியத்தைக் கனிவோடு பார்த்தவாறு, 'அங்கியே பத்திரமாக உக்காந்திட்டிரு' என்று கொஞ்சலாக முணுமுணுத்தார். என்றுமில்லாதவாறு அவர் மனம் பூரணமாக நிறைந்திருந்தது. வயிறாரச் சாப்பிட்டு விட்டு எழுந்தமாதிரி இருந்தது. மெல்ல ஜன்னலருகே வந்து அங்கு போட்டிருந்த சாய்வு நாற்காலியில் உடலைக் கிடத்தினார்.

தொடர்ந்து வாசித்துக் கொண்டிருந்த கண்ணப்பா அலை அலையாக அனுப்பி வைத்த நாதம் அவரிடம் சொகுசாக வந்து சேர்ந்த வண்ணமிருந்தது. அடுத்தாற்போல் அதில் இன்னும் எதன் சாயல்களையெல்லாம் தம்மால் இனம் கண்டு கொள்ள முடிகிறது என்று அறிய முயல்பவர் போல் அவர் வெகு உன்னிப்பாக அவர் வாசிப்பைக் கேட்டுக் கொண்டிருந்தார்.

விடுகதைக்கு விடை தேடும் சிறுவன் மாதிரி அப்போது அந்த முதியவர் காட்சியளித்தார்.

---




"என்ன சார் இது! வீடு விக்கறேன்னு விளம்பரப்படுத்தச் சொன்னீங்க......வாங்க ஆட்களை வேறு அழைச்சிட்டு வந்திருக்கேன். இப்ப விக்கல்லே என்கிறீங்களே!"

"ஆமாம், சார்! எங்க வீட்டின் வர்ணனையை நீங்க பேப்பர்லே விளம்பரப்படுத்தியதை நான் படிக்கப் பார்த்துப் புரிந்து விட்டேன்! இப்ப எனக்கு இதை விக்க மனமில்லே. அதனால்தான்!" □

# ஹாக்கி அண்ணனும் கிரிக்கெட் தம்பியும்






ஹாக்கிக்கு இவர் செய்ய வேண்டியது பாக்கி இல்லை!

ஹாக்கி (கிரிக்கெட்டிடம்): என்ன! ஒரே துள்ளல்? உங்க காப்டன் வாடேகர் பிறந்தது முட்டாள்கள் தினத்திலேயாம்!

கிரிக்கெட்: இருக்கட்டுமே, அதனாலென்ன? இரண்டு மாபெரும் வெற்றிகளைச் சம்பாதித்தார். அவர் மனைவி ரேகா இங்கிலாந்து வெற்றியைக் கேட்டதும் 'டான்ஸ்' ஆடினாளாம்!

ஹாக்கி: ஓரியண்டலா? பரதநாட்டியமா?

கிரிக்கெட்: எதுவாயிருந்தாலும் நன்னு ஆடியிருப்பாள். இப்போ நீங்க உங்க ஆட்டத்திலே சறுக்கி விழறதாகச் சொல்லிக்கிறாங்க!

ஹாக்கி: 1928ம் வருஷம் ஆம்ஸ்டர்டாமிலிருந்து 1956 மெல்போர்ன் வரை நாங்கள் ஒலிம்பிக் போட்டியில் முடிசூடா மன்னர்கள். ஒரு வருஷத்திலே கிடைத்த இரண்டு வெற்றிகளுக்கு ஒரே கொண்டாட்ட மயமாயிருக்கிறதே?

கிரிக்கெட்: முப்பது வருஷங்களுக்கு மேல் கிடைக்காத வெற்றி எங்களுக்குக் கிடைச்சது. ரோமிலும் டோக்கியோவிலும், பாகிஸ்தானிடம் பதவியைத் துறந்தீங்க. மெக்ஸிகோ ஒலிம்பிக்கிலே உங்க இரண்டாவது இடத்தையும் ஆஸ்திரேலியா பிடிச்சுக் கொண்டு விட்டது.... இப்படியே போனால்....?

ஹாக்கி: ரொம்ப அலட்டிக்காதே! சென்னை விமான நிலையத்திலே வந்திறங்கிய கையோடு உங்க உதவி காப்டன் வெங்கடராகவன் முருகப்பா தங்கக் கோப்பைப் பந்தயத்துக்குத்தானே வந்தார்? 1962ம் வருஷம் தொழில்மேதை முருகப்ப செட்டியார் அறுபதாம் ஆண்டு விழாவின்போது தம் அருமைத் தந்தையின் நினைவைப் போற்றுவதற்காக ஸ்ரீமதி வள்ளியம்மை லக்ஷ்மணன் முருகப்பா தங்கக் கோப்பையை எனக்கு வழங்கினார்!




கிரிக்கெட் (சிரித்துக் கொண்டே): உனக்கல்ல; ஹாக்கி ஆட்டத்திலே தேர்ந்தவர்களுக்குத்தான்! ஆனால் இந்திய ஹாக்கியின் தரம்தான் குறைஞ்சு போச்சே!

ஹாக்கி: கிடக்கு, இருக்கட்டும்! இரண்டு 'லெக்' இறுதி ஆட்டங்களில் பெங்களூர் எம். ஈ. ஜி. குழுவினரும், ஐ. ஸி. எப். ஆட்டக்காரர்களும் ஒருத்தொருக்கொருத்தர் சோடை போகாமல் எப்படி ஆடினாங்க, பார்த்தாயா?

கிரிக்கெட்: இரண்டு 'லெக்கு' இருந்தும் பிரயோசனமில்லையே? ஆட்டம் முதல் நாள் டிரா; இரண்டாம் நாளும் டிரா! திரும்பி இரண்டு கோஷ்டிகளுக்கு ஐந்து ஐந்து நிமிஷம் ஆட்டம்! அதுவும் இழுபறி!

இந்தத் தடவை ஆட்டம் பெங்களூர் எம். ஈ. ஜி. குழுவிடமிருந்தது! அதிர்ஷ்டம் ஐ. ஸி. எப். பக்கம் இருந்தது! அது வென்றது. ஒரு தயான் சந்த் தோன்றப் பிரார்த்தனை செய்! மூனிச் ஒலிம்பிக்கிலாவது நல்ல பெயரைச் சம்பாதிக்கலாம். -குண்டூசி

## தீபாவலி(ளி) கவிதை

"என்னடா கிட்டு
ஏனிந்த கட்டு?"
"புஸ்வாணம்தானே
பூவென நினைத்துப்
பக்கத்தில் சென்றால்
பெரிய ஆட்டம்பாம்!
மேலே கேட்காதே,
மேனியெலாம் எரிச்சல்!"

- கே. வி. முரளி



## ஆற்றிலே தங்கம்!

திரு ஆர். கிட்டப்பா ஆப்பிரிக்க நாடான எதியோப்பியாவில் ஓர் உயர்நிலைப் பள்ளியில் இரண்டாண்டு காலம் ஆசிரியராகப் பணியாற்றினார். தமக்கு ஏற்பட்ட இரு அனுபவங்களைக் கூறுகிறார்:

ஆற்று ஓரங்களில் மணலில் அரித்துக்கொண்டு தங்கம் கரையில் ஒதுங்கும். பள்ளி மாணவர்கள் அந்தத் தங்கத் துகள்களைக் கையில் வைத்துக் கொண்டு அழகு பார்ப்பார்கள். இங்கே தங்கக் கட்டுப்பாடு இருந்தால் ஆற்றைச் சுற்றி அல்லவா வேலி போட வேண்டியிருக்கும்?



நள்ளிரவு. துப்பாக்கி சுடும் சத்தம் காதைத் துளைக்கிறது. மக்கள் அலறிப் புடைத்துக் கொண்டு ஓடுகிறார்கள். நான் நடுங்கிப் போய் எழுந்து பார்த்தேன். கண்ணுக்கெட்டிய தூரத்தில் வானளாவத் தீப்பற்றி எரிந்து கொண்டிருந்தது. உள்நாட்டுக் கலகமா? நம்மை ஏதாவது செய்வார்களா? என்ற பீதியுடன் பெட்டி படுக்கையெல்லாம் கட்டி வைத்துக் கொண்டு ஓடிவிடத் தயாராக இருந்தேன்.

அந்தச் சமயத்தில் ஒருவர் என்னிடம் சொன்னார்: "இங்கு தீயணைப்புப் படை இல்லை. தீயென்றால் போலீசார் துப்பாக்கிச் சூடு நடத்துவார்கள். அந்தச் சத்தத்தைக் கேட்டு மக்கள் ஓடி வந்து தீயை அணைக்க வேண்டும்! இதற்காகத் தான் இந்த ஆர்ப்பாட்டமெல்லாம்!"

எதியோப்பியாவின் தலைநகர் அடிஸ் அபாபா. இதற்குப் 'புதுமலர்' என்று பொருள்.

பேட்டி: பீ. வி. கிரி



## வியக்கத்தக்கதொரு கட்டுப்பாடு!

கண்டம் விட்டுக் கண்டம் சென்று வழி மாறாமல் பருவகாலம் கடந்ததும் தம் தாய் நாடு திரும்பும் பறவைகள் இரவு பகலாக ஓய்வின்றிப் பிரயாணம் செய்கின்றனவே அவை எப்போது உறங்குகின்றன?

பறவை ஆராய்ச்சியாளர்கள் நுட்பமாகக் கவனித்தறிந்து கூறும் விவரம் இது:

'அவை கோஷ்டி கோஷ்டியாகப் பறந்து செல்லும்போது அவைகளிடையே ஒரு வியக்கத்தக்க கட்டுப்பாடு உருவாகி விடுகிறது. பறக்கும்போதே ஓர் இறக்கையின் கீழ் தலையை வைத்து ஓய்வெடுக்கின்றன - உறங்குகின்றன. பத்துமுதல் பதினைந்து நிமிடங்களே நீடிக்கும் இந்த உறக்கத்தின் போது தொடர்ந்து வழிகாட்டத் தங்கள் காதுகளையே நம்பியிருக்கின்றன. மற்றப் பறவைகளின் பறக்கும் ஒலியைக் கொண்டு இவ்வாறு சென்றபின் அவைகள் அடுத்த அணிக்கு இதே வகையில் உறங்க வசதியளித்து, அவை வழிகாட்டியாகப் பணியாற்றுகின்றன'.

'ஸ்புட்னிக்' - தேஜ்




★ இக்குறிப்பிட்ட கடிதம் ரூ. 15 பரிசு பெறுகிறது.

சில காலமாகவே நமது முதல் அமைச்சர் அவர்கள் ஜாதிப் பிரிவினையைத் தூண்டும் வகையில் பேசி வருகிருர். ஜாதியை அழிக்கப் போகிறேம் என்று கூறுபவர்களில் பலருக்கு நாட்டில் ஜாதிகள் இருந்தால்தான் பிழைப்பு நடக்கும். எனவே அவர்கள் மனத்துக்குள் பிரிவினைகள் இருக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டு வாயால் 'ஜாதி ஒழிய வேண்டும், ஜாதி ஒழிய வேண்டும்' என்று சும்மா சொல்லிக் கொண்டிருப்பார்கள்.

எந்தக் கேள்விக்கும் தி. மு. க.வினர் முறையாக, பிரச்னை ரீதியாகப் பதில் சொல்லுவதேயில்லை. ஏதாவது பிரச்னை என்ருல் உடனே, 'நான் சாமான்யன். கீழ் ஜாதிக்காரன்' என்று புலம்புவதையே கடமையாகக் கொண்ட ஒரு முதலமைச்சரை உலகில் நாம் வேறெங்கும் காண முடியாது.

பிரச்னைகள் இவர் சாமான்யரா, அல்லது எந்த ஜாதி என்பது பற்றி அல்ல. இவர் எந்த ஜாதியாய் இருந்தால் யாருக்கென்ன கவலே? பிரச்னைகள் மக்களுடையவை. அவற்றுக்குப் பதிலளிப்பது ஒரு முதலமைச்சரின் கடமை.

வெப்பம் மிகுந்த சூரியனுக்குக் கடல் பொங்காது. குளிர்ச்சி பொருந்திய சந்திரனுக்குக் கடல் பொங்கும். அதுபோல் வெறுப்புக்கும், பகைக்கும், கடுஞ் சொல்லுக்கும் யாரும் பணிந்து விடமாட்டார்கள். அன்பு செலுத்துவதாலும், ஆதரவு அளிப்பதாலும் தேர்ந்த இனிய சொற்களைக் கூறுவதாலும் உலகத்தையே ஆகர்ஷித்து விடலாம்.

நாடு எவ்வளவோ வளர வேண்டியிருக்கிறது. நடக்க வேண்டிய பாதையோ மிக நீண்ட, நெடிய பாதை.

இந்தச் சமயத்தில் ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக் கொண்டிருந்தால் நம் நாட்டின் கதி என்னுவது? நாடு எப்போது முன்னேறுவது ?

கரூர்
21—9—71 எஸ். ஜெயராமன்

★சமார் இரண்டு வாரங்களுக்குமுன் சென்னை வானெலி நிலையம் நாடகம் ஒன்றை ஒலிபரப்பியது.

அதில் வருஷத்துக்கு ஒரு குழந்தை பெறுவதாகத் தன் பெற்ருேரை ஒரு பெண் ஏசுவதாக அமைந்துள்ளதானது, நெஞ்சில் அணலைக் கொட்டுவதாக உள்ளது.

முன்னறி தெய்வங்களான தந்தையையும் தாயையும் இகழ்வதற்கு இளம் தலைமுறையினருக்குக் கற்பிக்க வேண்டாம்.

சென்ற 12—9—71 அன்று 'ஆணி வேர்' என்றொரு நாடகம். அதில், ஒரு மருந்துக் கடைக்காரர் பெண் 'ட்ரக் அடிக்ட்'டாகக் காட்டப்படுகிருள்.

அந்தப்பெண் திருந்தி விடுவதாகக் கடைசி வரை ஒரு நிகழ்ச்சியுமே இல்லை! ஆனால், அக்கடையில் மானேஜராக இருப்பவர் ஆறு குழந்தைகளைப் பெற்று அதற்காக அழுபவராகக் காட்டப்படுகிருர் !

திரைப்படமும், நாடகமும் எழுதப் படிக்கத் தெரியாதவர்களிடையே கொண்டுள்ள ஆதிக்கம் மிகவும் வலுவானது: அதை நன்னெறியில் பயன்படுத்த வேண்டும். மக்களை மோசம் செய்ய வேண்டாம்.

இழிந்த இலக்கியங்களும், தரங்கெட்ட திரைப்படங்களும், மாசு படிந்த செய்தித் தாள்களும், தர்ப்போதனையான வானெலியும், விவேகமற்ற விளம்பரங்களும் மலிந்து விட்டன இந்தியாவில்.

கூடூர்
20—9—71 சீ.ஜிவெட்.

சென்ற 19—9—71 கல்கி இதழில் வெளிவந்துள்ள சாராய சகாப்தம் என்ற ராஜாஜியின் கவிதைக்குப் பதில் கவிதை திரு மு. கருணநிதி தினத்தந்தி 19—9—71 இதழில் எழுதியுள்ளார். அதில் எந்தவிதமான உருப்படியான பதிலையும் காணும்.

ராஜாஜி அவர்கள் கேட்ட கேள்வி ஏழைகள் சோற்றுக்குத் திண்டாடும் பொழுது சாராயக் கடைகளில் அவர்கள் பெரும் கூட்டமாகத் திரள்கிருர்கள். இம்மாதிரியான நிலைமையைக் கொண்டு வந்தது ஏன் என்பதாகும். அதற்குப் பதிலாக, பணக்காரர்கள் குடிக்கும்பொழுது ஏழை மட்டும் ஏன் குடிக்கக் கூடாது; அவன் ஏன் வார்னிஷ் மட்டும் குடித்துச் சாக வேண்டும்; சாராயத்தைக் குடித்துச் சாகட்டும் என்ற நல்ல எண்ணத்தில் கடைகளைத் திறந்திருப்பதாகத் திரு கருணநிதி கூறியிருக்கிருர். பணக்காரர்கள் விஸ்கி, ரம், போன்ற மதுபான வகைகளைக் குடித்தாலும் அதனல் ஏற்படும் தீமைகளைப் பண பலத்தால் பார்த்துக் கொள்வார்கள். சுதந்திரக் கட்சியினர் சிலர் பர்மிட் வாங்கிக் குடித்ததாகவும் திரு கருணநிதி குற்றம் சாட்டியுள்ளார். இன்றைக்கு எந்தக் கட்சியை எடுத்தாலும் அதில் குடிப் பழக்கம் உள்ளவர்கள் இல்லாமல் இல்லை. திராவிட முன்னேற்றக் கழகத்தினரிலும் இப்பழக்கம் உள்ளோர் உண்டு. இதனை நாடே அறியும். ஆகவே, இந்த வாதங்களெல்லாம் குடியினல் சீரழியும் ஏழைக் குடும்பங்களைக் காப்பாற்ருது.

கேட்ட கேள்விக்குச் சரிவரப் பதில் சொல்ல இயலாத நிலைமையில் மாண்புமிகு தமிழக முதல்வர் கருணநிதி ஏதோ ஆத்திரத்தில் கவிதை பாடியுள்ளார் என்றே தோன்றுகிறது.

சென்னை — 14
21—9—71 ம. வே. குருமணி

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

# தொடர்ந்து வரும் கனவை நனவாக்கிட
# பாங்க் ஆஃப் பரோடாவில்
# ரெக்கரிங் டெபாஸிட் கணக்கு துவக்குவீர்

உங்களுக்கு டேபிள் ஃபான் வேண்டுமா? ரேடியோ வேண்டுமா? அல்லது சைக்கிள் வேண்டுமா? உங்கள் கனவு எதுவானாலும், அது நனவாகும் வேளை வந்து விட்டது. பாங்க் ஆஃப் பரோடாவில் ரெக்கரிங் டெபாஸிட் கணக்கு ஒன்றைத் துவக்குவீர். மாதாமாதம், சிறுகச் சிறுக சேமித்து வாருங்கள். எங்கள் பங்காக நாங்களும் கணிசமான வட்டித் தொகையை அத்துடன் சேர்த்துக்கொண்டே வருகிறோம். விரைவிலேயே, உங்களுக்கு எப்பொருள் வேண்டுமோ அதை வாங்கப் பணம் சேர்ந்திருப்பதைக் கண்டு வியப்பீர்கள்!




நீங்கள் என்றென்றும் வளமையுடன் வாழ

**பாங்க் ஆஃப் பரோடா**

தலைமைக் காரியாலயம்: மாண்ட்வி, பரோடா.
அநேகமாக இந்தியாவிலுள்ள ஒவ்வொரு மாநிலத்திலும் சேவை செய்ய, 550-க்கும் மேற்பட்ட கிளைகள் உள்ளன.
மற்ற கிளைகள்: யு. கே., கிழக்கு ஆப்பிரிக்கா, மொரீசு, பிஜி தீவுகள், மற்றும் கயானா.

Shilpi-BOB-4/71 Tam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon